REGISTERED. No. M. 1500

"NAVASAKTI" WEEKLY

# நவசக்தி

வாரப் பதிப்பு

வெள்ளிக்கிழமை தோறும் வெளிவருவது.

| வாரப்பதிப்புச் சந்தா விவரம் | | ரூ. | அ. |
|---|---|---|---|
| வருட சந்தா | ... | 5 | 0 |
| ஆறுமாத சந்தா | ... | 3 | 0 |
| வெளி நாடு-வருட சந்தா | ... | 6 | 0 |

| விளம்பர விகிதம். | | | |
|---|---|---|---|
| கலம் 1-க்கு வாரம் 1-க்கு ரூ. | ... | 7 | 0 |
| சில்லரை விளம்பரம் 1 அங். | ... | 0 | 8 |

நீண்டகாலம் விளம்பரஞ் செய்வோர் நேரே எங்கட்கு எழுதவும்.

"வீடு பெறநில்" "மாற்ருனுக் கிடங்கொடேல்" "ஏற்பதிகழ்ச்சி"

சிலம்பு ச | ரத்தாக்ஷி௵ ஆவணி௴ உகவ (5—9—24) | பரல் சசூ

## ஒரு சந்நியாசியின் அநுபவம்

["நியாசபி இன் இண்டியா" என்ற ஆங்கில மாதாந்த சஞ்சிகையில் 1910-ம் வருஷத்து ஜூன் மாத சஞ்சிகையில் சுவாமி அகிலாண்டையா என்பவருடைய அநுபவங்கள் காணப்படுகின்றன. இவர் அக்காலத்தில் (1910-ம் வருஷத்தில்) இமயமலைக்கருகாமையிலுள்ள மாயாவதியில் வசித்துக்கொண்டிருந்தார். இவர் முதலில் பாரிஸ்டர் பரீட்சையில் தேறியவர். பெரும்பொருள் திரட்டியவர். இவராலேயே எழுதப்பட்ட இவருடைய வாழ்க்கைக் குறிப்புகள், இவருடைய நண்பரும், இந்தியா அரசாங்கத்து பொக்கிஷ அங்கத்தினராயிருந்தவருமான ஸர் வில்லியம் மேயரிடத்தில் இருந்தன. அவரிடத்திலிருந்த குறிப்புகளே மேற்படி பத்திரிகையில் வெளியிடப்பட்டிருக்கின்றன. அக்குறிப்புகளின் சாராம்சத்தைக் கீழே வெளியிடுகிறோம்.]

என்னுடைய மனைவி 1906-ம் வருஷம் நவம்பர் மாதம் பதினுருந்தேதி இறந்துவிட்டாள். சுமார் நாற்பது ஆண்டுகள் நீடித்திருந்த எங்களுடைய மண வாழ்க்கையில் நாங்கள் ஒருவர்க்கொருவர் மிகவும் பற்றுடையவர்களாகவே இருந்தோம். என் மனைவி இறந்துபோனது என்னிடத்தில் ஒரு மாறுதலை உண்டாக்கிவிட்டது. உலக விஷயங்களில் எனக்கு ஒருவித வெறுப்பு ஏற்பட்டுவிட்டது. உடனே நான் வசித்துக்கொண்டிருந்த ஹைதராபாத்தைவிட்டு ஹிமயமலைக்குச் சென்று விடலாமென்று எண்ணினேன். அங்குச் சென்று விவேகானந்தருடைய ஆசிரமத்தில் வசிப்பதென்று தீர்மானித்தேன். அந்த ஆசிரமத்தாருக்கு விண்ணப்பமும் செய்து கொண்டேன்.

* * *

பிப்ரவரி மாதத்து மத்தியில் ஒருநாள் இரவு படுக்கைக்குச் செல்லு முன்னர், நான் தியான நிலையில் கண்மூடிக்கொண்டு என் படுக்கை மீது உட்கார்ந்துகொண்டிருந்தேன். என்னைப் படைத்த ஆண்டவன் மீது என் மனதைச் செலுத்த உத்தேசித்துக் கொண்டிருக்குஞ் சமயத்தில் என் மூளையில் ஒருவித உணர்ச்சி உண்டாயிற்று. என் தேகத்தின் உள்ளே ஒருவித ஒளி உண்டாவதுபோல் தோன்றியது. ஒருவித ஒலியும் ஏற்பட்டது. அவ்வொளி தெய்வத்தன்மை பொருந்தியதாகக் காணப்பட்டது. அவ்வொளி நண்பகலில் தோன்றும் சூரியனைவிடச் சிறிது பெரிதாய், அதைப்போன்ற வட்டவடிவினதாய் இருந்தது. ஆனால் அடியில் மாத்திரம் நேர்கோடு இழுத்ததுபோல் கறுப்பு நிறம் அமைந்திருந்தது. இதனுல் அது தெய்வத்தன்மை பொருந்திய வெளிச்சம் என்று நான் நிச்சயித்தேன். பிறகு அதைப்பற்றி நான் விசாரித்ததில் அது சூரியனுடைய வெளிச்சத்தின் புருஷத்தன்மை யென்றும் அஃது இருட்டுக்குப் புறம்பானதென்றும் தெரிந்துகொண்டேன். நான் எப்பொழுதும் நிரீச்சுரவாதியாக இருந்ததில்லை. ஆனுல் இத்தோற்றம், ஏற்கெனவே நான் கடவுளிடத்தில் கொண்டிருந்த பக்தியை அதிகரித்தது. இது நடந்த சில நாட்கள் கழித்து, விவேகானந்த ஆசிரமத்தில் என்னைச் சேர்த்துக்கொள்ள முடியாதென்று அங்கிருந்து எனக்குக் கடிதம் கிடைத்துவிட்டது. என் படிப்பெல்லாம் ஆங்கிலப் படிப்பே. எனக்கிருந்த சிறிது சமஸ்கிருதப் படிப்பும், கல்லூரியில் படித்த தெலுங்கினின்று பெற்றதாகும். வேதாந்தத்தின் பெருமையை அறிய வேண்டி சமஸ்கிருதத்தை நன்குகற்க வேண்டுமென்ற ஆவல் எனக்கு அதிகமாயிருந்தது.

1907-ம் வருஷம் மார்ச்சு மாதம்முதல் நவம்பர் மாதம்வரை அத்துறையில் உழைத்தேன். பிறகு பகவத்கீதையை நன்கு அறிந்துவிட்டேன். உபநிஷத்துகளில் சில பாகங்களிலும் வேறு சிலவற்றிலும் தேர்ச்சி பெற்றேன். நான் யோகத்தில் வெற்றிபெறுவதற்கு இந்தப் படிப்பு ஒரு சாதனமாயிருந்தது. "யோகத்தில் வெற்றியடை; உடனே தெய்விக சோதி தோன்றும். அப்பொழுதே மறு பிறப்பிலிருந்தும் நீ விலக்கப்படுவாய்" என்றதோர் உணர்ச்சி அடிக்கடி என் உள்ளத்தில் தோன்றிக்கொண் டிருந்தது. முதலில் தோன்றிய சோதி மறுபடியும் தோன்றவில்லை. ஆனுல் என் படிப்பிலும் விசாரணையிலும் நான் அதிக முன்னேற்றம் அடைந்து வருவதாக எனக்குத் தோன்றியது. இந்த அருட்சோதியைக் காண யோகிகள் ஐம்பது ஆண்டுகள்வரை முயன்றூர்களென்றும் ஆனுலும் அதனைக் கிடைக்கப் பெருதவர்களானூர்கள் என்றும் நான் கேள்விப்பட்டிருக்கிறேன். அவர்களுக்கே அஃது அசாத்தியமாயிருந்தபோது, பல நோய்களுக்குட்பட்டிருந்த நான் இதனை எங்ஙனம் அடையமுடியும்?

* * *

1904-ம் வருஷம் நவம்பர் மாதம் பதின்மூன்றுந்தேதி நான் என்றும் மறக்கக்கூடாத நாளாகும். இதற்கு மூன்று மாதங்கள் முன்னர் முதற்கொண்டு என் மகள் என்னிடத்தில் வசித்துவந்தாள். அப்பொழுது அவள் கணவன், அவளை அழைத்துக்கொண்டு போவதற்கு வந்திருந்தார். இராஜப் பிரதிநிதி அக்காலத்தில் அங்கு வரப்போவதாகத் தெரிவிக்கப்பட்டிருந்ததாதலின், அப்பொழுது நடைபெறும் தமாஷாக்களைக் கண்டுவிட்டுப் போகலாமென்று நவம்பர் மாதம் பன்னிரண்டாந் தேதிவரை அங்குக் காத்திருந்தார்கள் அவர்கள் பன்னிரண்டாந் தேதி இரவு தமாஷாக்களைப் பார்த்துவிட்டுச் சென்று விட்டார்கள். அன்று மாலை ஆறு மணிக்கே என் இராப் போஜனத்தை முடித்துக்கொண்டு வந்துவிட்டேன். அப்பொழுது வீட்டில் நான் ஒருவனே தன்னந்தனியனுக இருந்தேன். படுக்கைக்குப் போகுமுன்னர் வழக்கம்போல் தியான நிலையில் இருக்கையில், என் தேகத்தில் மின்சார சக்தி ஊடுருவிப் பாய்ந்தாலன்ன ஒருவித உணர்ச்சி உண்டாயிற்று. என் தேகம் ஓர் ஆட்டம் கொடுத்தது. இங்ஙனம் அது சுமார் நாற்பத்தைந்து நிமிஷங்கள் நடைபெற்றது. இதனுடன் என் தேகத்திலுள்ள எல்லாப் பாகங்களும் - ஒவ்வோர் அங்கமும் - சுத்தப்படுத்தப்படுவது போலவும் தோன்றியது. எந்தச் சக்தி என்னை இங்ஙனம் செய்தது என்பது எனக்குத் தெரியவில்லை. ஆனுல் இவைகளையெல்லாம் நான் பொறுமையுடன் சகித்துக்கொண்டு வந்தேன். பிறகு ஓய்ந்து அப்படியே படுத்துவிட்டேன். இதுகாறும் நடந்தனவெல்லாம் என்ன என்று ஆச்சரியப்பட்டுக் கொண்டிருந்தேன். சில வாண வேடிக்கைகளும் சில விநோதமான நட்சத்திரங்களும் மின்னல்களும் என் கண்முன் தோன்றின. உடனே நான் தூங்கிவிட்டேன். அடுத்த நாள் இரவு, முதல் நாள் இரவு உண்டானதுபோல் மின்சார சக்தியைப் போன்றதொரு சக்தி சிறிதளவாக என் தேகத்தில் பாய்ந்தது. மீண்டும் என் தேகம் முதல் நாளைப்போல் பரிசுத்தப்படுத்தப்பட்டது. ஆனுல் இவைகள் எல்லாம் எனக்கு ஆச்சரியத்தைக் கொடுக்கவில்லை. முதல் நாள் இரவு என் தேகத்தில் ஏற்பட்ட புதிய உணர்ச்சிக்குப் பிறகு என் சிறு நீரின் நிறம் மாறியதும், அஃது அளவு கடந்த நாற்றத்தை உண்டாக்கியதுமே எனக்கு ஆச்சரியத்தைக் கொடுத்தன. எனது சிறு நீரின் அருகே எறும்புகள் கூட்டங் கூட்டமாக மொய்த்துக்கொண்டு இறந்து போயின. இங்ஙனமே மூன்று நாள் எனக்குச் சிறு நீர் இறங்கியது. இதன் பயனுக எனக்கிருந்த நீர் வியாதி ஒழிந்துபோயிற்று. எனக்கிருந்த இன்னும் சில வியாதிகளும் ஒழிந்து போயின. புதிய ஒரு பலம் வந்து விட்டதாக எனக்குத் தோன்றியது. முப்பது வயதுக்கு முன்னர் என்தேக நிலைமை எப்படியிருந்ததோ அப்படியிருப்பது போல் எனக்குத் தோன்றியது. இதற்கு முன்னர் நான் ஒரு நோய் மூட்டையாக இருந்தேன். பத்து நிமிஷங்கூட காலோடு கால் சேர்த்து உட்காரக்கூடாத நிலையில் இருந்தேன். இப்பொழுதோ அதே நிலையில் பதினுன்கு மணி நேரம் ஒரே நிதானமாக உட்காரக் கூடிய சக்தி எனக்கு உண்டாகிவிட்டது.

* * *

என்னுடைய குடும்பத்தார் எப்பொழுதும் ஸ்ரீ தேவியையே வணங்குவது வழக்கம். அந்தப்பழக்கமே எனக்கும் உண்டாயிருந்தது. நவம்பர் மாதம் பதின்மூன்றுந் தேதி மேற்கூறிய சம்பவம் நடந்த பிறகு, அவள் என்னைக் கைதூக்கிவிட ஆரம்பித்தாள். நான் யோகாப்பியாசம் செய்யஆரம்பித்தேன். எனக்குச்சரியான மார்க்கத்தைக் காண்பிக்கவேண்டி அவள் அடிக்கடி கனவில் தோன்றிக்கொண்டு வந்தாள். மேற்படி நவம்பர் மாதம் பதின்மூன்றுந்தேதி கழித்த ஒருவாரத்திற்குள் ஸ்ரீ தேவி என்மனைவியின் வடிவமாக வந்து ஒரு பொற்றட்டில் சிறிதளவு தூய வெண்மை நிறங்கொண்ட அரிசியை வைத்து எனக்கு ஈந்தாள். இதன் மூலமாக நான் அன்னத்திற்கு அலையவேண்டியதில்லையென்றும் தான் என்னைப் பாதுகாத்துக் கொள்வதாகவும் அவள் கூறினுள். மற்ருெரு நாள் அவள் என்கனவில் தோன்றி என்னை ஒரு சிறந்தயோகியாக்குவதாகத் தெரிவித்தாள். அவளே எனக்கு இதுகாலை குருவாக விளங்கி வருகிருள். இப்பொழுது அவள் எனக்குள்ளே அந்தர்யாமியாய் இருந்து கொண்டு என்னுடைய யோகசாதனத்துக்கு வழி காட்டிக் கொண்டு வருகிருள். இதனுடன் கூட அவளும் நானும் சம்பாஷிப்போம்; அரிய விஷயங்களைப்பற்றி ஒருவர்க்கொருவர் தருக்கம் செய்து கொள்வோம். நான் ஏதேனும் ஒரு விஷயத்தைப் பற்றி முடிவுக்கு வரவேண்டுமோயின் அவளுடைய ஆதரவையே நாடுவது வழக்கம். உலகத்தில் அதிக பற்றுவையாதிருக்கும் படி அவள் அடிக்கடி எனக்கு எச்சரிக்கை செய்வாள்.

* * *

நான் முற்பிறவிகளில் ஒரு துறவியாயிருந்ததாகவும், இதற்கு முன் பிறவியில் மாத்திரம் நான் உலகப்பற்று சிறிது கொண்டிருந்ததாகவும் இப்பிறவியிலும் இன்னும் இவ்வுலகத்தின் மீது ஆசைவைத்துக்கொண்டிருந்தால் கடைத்தேறுவது எப்படி என்றும் அவள் அடிக்கடி எச்சரிக்கை செய்திருக்கிருள். இங்ஙனம் எச்சரிக்கை செய்து என் தீமைகளையெல்லாம் அகற்றிவிட்டு என் கண்ணை விழிக்கச் செய்தாள். எனக்கு இனிப்பிறவியில்லை என்று அவள் என்னிடத்தில் கூறியிருக்கிருள். அவள் என்னை எங்ஙனம் காப்பாற்றி வருகிருள் என்பதற்கு ஈண்டுச் சில உதாரணங்கள் தருகிறேன். ஒரு சமயம் ஹைதராபாத்தில் பெருவெள்ளம் ஏற்பட்டது. அப்பொழுது ஒருநாள் காலை நான் படுக்கையிலிருந்தபோது என் குமாரன் வந்து, நான்கு பக்கங்களிலும் வெள்ளம் வந்து சூழ்ந்துகொண்டிருப்பதாகக் கூறினுன். உடனே நான் என்ன செய்வதென்று ஸ்ரீ தேவியைக் கேட்டேன். 'உடனே செல்'என்று உத்தரவு கிடைத்தது. அப்பொழுது என்னுடன் என் குமாரன், குமாரி, ஐந்து வயதுள்ள குழந்தை, ஒரு சமையற்காரன், ஒரு பார்சி குமாஸ்தா, எனது உறவினன் ஒருவன் ஆகிய இவர்கள் இருந்தார்கள். கடைசியாகக் கூறப்பட்டவர் தவிர, மற்ற அனைவரும் இரண்டு நிமிஷத்திற்குள் வெளியே சென்று விட்டோம். அப்பொழுது முழங்கால் அளவு ஜலமே இருந்தது. நாங்கள்சென்ற அரைமணிநேரத்திற்குள் தண்ணீர் இருபது அடி உயரம் உயர்ந்துவிட்டது. நாங்கள் இருந்த வீடும் அப்படியே விழுந்துவிட்டது. அதன்கீழ் நாற்பத்தைந்து பேர் அகப்பட்டுக்கொண்டு விட்டனர். இவ[illegible]ம் அகப்பட்டுக்கொண்டவ், அவ்வீடு வி[illegible]தென்று நினைத்து நான் அவ்வீட்டை விட்டுச் சென்றபோது என்[illegible] பார்த்து நகைத்த[illegible]ர். நாங்கள் வேறோர் உயர்ந்த பூமி ம[illegible]ட்டத்தை யுடைய ஒரு வீட்டில் போய்த் த[illegible]கினேம். அங்கும் எட்டுஅடி உயரம் ஜலம் [illegible]ந்துவிட்டது. அவ்வீட்டின் ஒரு பாகம் [illegible]ழுந்துவிட்டது. நாங்கள் இருந்த பாகம் மாத்திரம் விழவில்லை. நான் ஸ்ரீ தேவிக்கு வணக்கம் செலுத்தினேன்.

* * *

1907-ம் வருஷம் ஏப்ரல் மாதம் ஒரு சம்பவமும், ஆகஸ்ட் மாதம் ஒரு சம்பவமும் நவம்பர் மாதம் பதின் மூன்றுந் தேதி ஒரு சம்பவமும் நடைபெற்றன. முதற் சம்பவத்தைப்பற்றி இங்குக்கூறுகிறேன். ஸ்ரீ தேவி என்குடும்பத்தின் உபாசனு தெய்வமென்றும், அவளை தினம் நான் வணங்குபவனென்றும் முன்னர்க் கூறியிருக்கிறேறன். வேதாந்த விசாரணை செய்து அதன் பயனுக நான் விருத்தியடைந்து வருகிறேன் என்று உணர்ந்ததும், எனக்குத் தெரிந்த தேவி ஸ்தோத்திரங்களை நான் தினந்தோறும் சொல்லிக் கொண்டுவருவது வழக்கம். மேற்கூறப்பட்ட ஏப்ரல் மாதத்தில் ஒரு நாள் நான் வேண்டுமென்றே தேவி ஸ்தோத்திரத்தைக் கூருமல் பரபிரம்மத்தைப் பிரார்த்தனை செய்துகொண்டு படுத்துக் கொண்டேன். என் கண்ணை மூடியதும் சில கோரமான உருவங்கள் தோன்றின. உடனே நான் எழுந்து விடும்படியாகிவிட்டது. பழையபடி தேவி ஸ்தோத்திரங்களைச் சொல்லிவிட்டுப் படுத்துக் கொண்டதும் நிம்மதியாகத் தூங்கினேன். மறுநாள் இரவும், என்னதான் நடக்கிறதென்று பார்ப்போம் என்ற நோக்கத்துடன், தேவிஸ்தோத்திரத்தைச் சொல்லாமல் முன்போல வேறுவிதமான ஸ்தோத்திரங்களைச் செய்து விட்டுப் படுத்துக் கொண்டேன். மீண்டும் அப்படியே உருவங்கள் தோன்றின. இனிமேல் இங்ஙனம் செய்வதில்லை யென்று தீர்மானித்து, தேவி ஸ்தோத்திரங்களைச் செய்துவிட்டுப் படுத்துக்கொண்டேன்.

* * *

ஆகஸ்ட் மாதத்தில் என்னைச் சந்திக்க ஒரு பிராமண ஸ்திரீ பெங்களூரிலிருந்து வந்தாள். அவள் ஒரு விதவை. அவளுக்கு அப்பொழுது முப்பத்தைந்து வயதிருக்கும். அச்சமயத்தில் என் குமாரி வீட்டிலிருந்தமையால், அவள் என்னுடன் தங்கியிருக்கச் சௌகரியமாயிருந்தது. இந்த ஸ்திரீக்குத் தேவி உபாசனை இருந்தது. நான், தேவி உபாசனையை ஒருவர் மூலமாக உபதேசம் பெற்றுக் கொள்ள வேண்டுமென்று நெடுநாளாகக் கோரி

யிருந்தேன். எனவே அந்த ஸ்திரீயிடத்தில் நான் உபதேசம் பெற்றுக்கொண்டேன். என்னுடன் அம்மாது மூன்றுமாதம் தங்கியிருந்தாள். நவம்பர் மாதத்தில் என் பெண் போவதற்கு முன்னர் அவளும் புறப்பட்டுச் சென்றுவிட்டாள். பிறகு நவம்பர் மாதம் 15 அல்லது 16 தேதியில் அந்த ஸ்திரீயிடமிருந்து எனக்கு ஒரு கடிதம் வரப்பெற்றேன். அவள் என்னிடமிருந்து பண உதவி கேட்டிருந்தாள். நான் ஒரு சிறு தொகை அனுப்பினேன். நான்கு நாள் கழித்து, நான் ஒரு சுடுகாட்டில் ஒரு பிணம் எரிந்துகொண்டிருப்பதாகவும் அங்குச் சில பிராமணர்கள் இருந்ததாகவும், அந்த ஸ்திரீ என்னிடம் வந்து "நான் ஒரு தேவதை; என் உருவத்தைப்பார்" என்று சொல்லி விநோதமான ஓர் உருவத்தைக் காண்பிப்பதுபோலவும் ஒரு கனவு கண்டேன். மறுநாள் காலை, என்னுடைய மணியார்டர் திரும்பி வந்தது. அந்த அம்மாள் இறந்துவிட்டாள் என்று தெரிந்து கொண்டேன். பிறகு, ஸ்ரீதேவி, தன்னுலேயே அந்த ஸ்திரீ அனுப்பப்பட்டாளென்றும், அவளை நான் ஒரு குருவாக எண்ணவேண்டுமென்றும் கூறினுள்.

* * *

அங்ஙனமே தண்டி சுவாமி என்ற ஒரு சந்நியாசி இருக்கிறாரென்றும் அவரிடத்தில் யோகாப்பியாசங்களைக் கற்றுக்கொள்ளலாமா வென்றும் ஸ்ரீ தேவியின் உத்தரவைக்கேட்டேன். வேறோர் யோகியை என் முன் கிளத்தினுள். இங்ஙனமே நான் பல சம்பவங்களைக் கூறக்கூடும். இப்பொழுது நான் ஸ்ரீ தேவியின் கடாட்சத்தால் யோகாப்பியாசம் செய்து கொண்டுவருகிறேன். இப்பொழுது எனக்கு ஒரு வித பலமும் உறுதியும் ஏற்பட்டிருக்கின்றன.

## வியாபாரிகள் கவனிக்க வேண்டும்.

வருகிற தீபாவளிக்கு கத்தர் ஸ்டாக் செய்வதற்காக வியாபாரிகள் இப்பொழுதுதே பிரயத்தனம் செய்யவேண்டும். சென்ற வருஷம் தீபாவளி நெருக்கடியில், பல வியாபாரிகள் கத்தர் அகப்படாமல் திருப்பூருக்கு வீணாக வந்து திரும்ப நேர்ந்தது. இவ்வருஷமாவது அப்படியில்லாமல் இப்பொழுதே ஸ்டாக் செய்ய முன்வரவேண்டும். காலத்தில் வாங்கி வைப்பவர்களுக்கு சகாயம் செய்ய திருப்பூர் காங்கிரஸ் காதி வஸ்திராலயத்தில் நிச்சயம் செய்யப்பட்டிருக்கிறது. செப்டம்பர் மாதம் முதல் தேதியிலிருந்து 30-க்குள் வரும் ரூபாய் 500க்கு குறையாத ஆர்டர்களுக்கு ரூபாய்க்கு ½-அணு கமிஷன் கொடுக்கப்படும். இந்த கமிஷன் செப்டம்பர் மாதம் தான் கொடுக்கப்படும். அக்டோபர் முதல் தேதியிலிருந்து கமிஷன் நிறுத்தப்படும். பல வியாபாரிகள் காங்கிரஸ் கிளை வஸ்திராலயங்களில் விற்கும் விலைக்கு தாங்கள் விற்க முடியவில்லையென்று முறையிடுகிறார்கள். அவர்களுக்காகவே இந்த ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது. அக்டோபர் மாதத்தில் கமிஷன் நிறுத்தப்படுவதுமன்றி காங்கிரஸ் கிளை வஸ்திராலயங்களின் ஆர்டர்களை முக்கியமாய் கவனிக்கப்படும்.

நா. ராமஸ்வாமி,
காரியதரிசிக்காக.
தமிழ்நாடு கதர் போர்ட்.



# பாணபுரத்து வீரன்

## தேசபக்தி நிறைந்த நாடகம்

ஒரு 'நாடகாசிரியன்' எழுதியது

### ஐந்தாம் அங்கம்

#### முதற் களம்

இடம் :—பாணபுரத்துக்கும் ஈசான புரத்துக்கும் இடையே யுள்ள ஒரு மைதானம்.

காலம் :—அதி காலை

[பாணபுரத்து வீரர்கள் அணிவகுத்து நிற்கிறார்கள். எங்கும் யுத்த கோஷம் நிறைந்திருக்கிறது. இச்சமயத்தில் நாசநாதனும் பாணபுரத்துப் பிரதிநிதிச் சபையின் தலைவர் சிலராலும் புடை சூழப்பட்டு புரேசன் பிரவேசிக்கிறான். யாங்கணும் ஓர் ஆரவாரம் உண்டாகிறது. உடனே புரேசன் மட்டும் தன் குதிரை மீது ஆரோகணித்துக்கொள்கிறான். உடனே 'புரேசருக்குஜய' என்று வீரர்கள் சந்தோஷக் கூச்சலிடுகிறார்கள் ]

புரேசன் :—வீரர்களே! தாய் நாட்டின் பொருட்டு உயிரைக்கொடுக்கச் சித்தமாயிருக்கும் வீரர்களே! என் அன்பர்களே! உங்களுக்கு இச்சமயத்தில் நான் அதிகமாக ஒன்றுங் கூறப்போவதில்லை. இன்னும் சிறிது நேரத்திற்குள் உங்களுடைய வாட்கள் சத்துருக்களுக்கு மின்னலாய் விளங்கப்போகின்றன; உங்களுடைய தோட்கள் பகைஞரின் தோட்களோடு மலையப்போகின்றன; உங்களுடைய வீரக்கழலொலி அதோபாடி வீட்டில் கிடக்கும் அதிரதருடைய ஆண்மையைக் கலங்கச்செய்யப்போகின்றது. உங்களுடைய வாளிலும் தாளிலும் தோய்ந்திருக்கும் இரத்தத்தைக்கண்டு கூற்றுவன் கதறப்போகிறான். உங்களுடைய ஜயபேரிகையைக் கேட்டு சுதந்தரதேவி தாண்டவம் செய்யப்போகிறாள். அவளுடைய வரவில் நீங்கள் எவ்வளவு ஆவலாயிருக்கிறீர்கள் என்பதை நானறிவேன். உங்களுக்கு ஆண்டவன் அருள் செய்வானுக. [பொறுத்து] நீங்கள் இதற்கு முன்னர் ஆறுமுறை தோற்றுப் போயிருக்கிறீர்கள் என்பதையும் இப்பொழுது ஏழாவது முறை யுத்த களத்தில் வந்து நிற்கிறீர்கள் என்பதையும் ஞாபகப்படுத்திக்கொள்ளுங்கள். இம்முறையும் நீங்கள் தோல்வியுற்றுப்போவீர்களாயின் உங்களைப் பேடிகளென்று உலகம் அழைக்கும். உங்களைக்கண்டு அறம் ஒளிந்திடும்; சத்தியம் அஞ்சும்; ஆண்மை என்னும் அரிய செல்வம் நகைக்கும். பிறகு நீங்கள் இந்த உலகத்தில் இருந்தும் ஒன்றே; இறந்தும் ஒன்றே. நடை பிணங்களாகவே உங்களைச் சுதந்தர உலகம் கருதும். இவைகளுக்கெல்லாம் நீங்கள் சம்மதிக்கிறீர்களா? பாணபுரத்திலே பிறந்து, வாலீசரால் பழக்கப்படுத்தப்பட்ட நீங்கள் இந்த யுத்தத்தையும் அதிரதருக்கு விடுத்து அதனால் உங்கள் தாய் நாட்டிற்கும், உங்களை உயிராகப் போற்றி வந்த வாலீசருக்கும் அழியாத அவமானத்தைத் தேடித்தருவதாயின் இப்பொழுதே இந்த யுத்த களத்தினின்றும் ஓடி விடுங்கள். ஆயுதபாணிகளாய் வீரர்களைப்போல இங்கு நிற்க வேண்டாம். ஆண்மையை விட, பொருளை விட, உயிரை விட மானமே பெரிது. மானமின்றி வாழ்வோர் மானிகளல்லர். அம்மானத்தை நீங்கள் ஆறுமுறைவிட்டுக்கொடுத்திருக்கிறீர்கள். இந்த ஏழாவது முறையேனும் அதனை நீங்கள் கைப்பற்றிக் கொள்ள வேண்டாமா? வாலீசரால் வணங்கப்பட்டுவந்த சுதந்தர தேவதை அதிரத அரசரால் சொல்லப்பட்டு வருகிறாள். வீரர்கள் என்று சொல்லிக்கொள்ளும் நீங்கள் இதனைப் பார்த்துக் கொண்டிருக்க விரும்புகிறீர்களா? அத்தேவியை உங்கள் வசப்படுத்திக் கொள்ள வேண்டாமா? [பொறுத்து] யுத்தத்தில் வெற்றிபெறுவது அல்லது இங்கேயே மாள்வது என்ற எண்ணமே இங்குள்ள வீரர்களின் உள்ளத்தில் குடி கொண்டிருக்கிறதென்று நம்புகிறேன். அவ்வுறுதியில்லாதவர்கள் விலகிச் செல்லலாம். மற்றவர்கள் சத்துருக்களின் காப்பு நிலையம் அதிரும்படி ஜெய கோஷம் செய்யட்டும். [வீரர் அனைவரும் ஜெய கோஷம் செய்கிறார்] இதுவே ஆண்மை. இதுவே வீரம். இப்பொழுதே நான் உண்மையான புரேசனுயினேன். சுதந்தர அரசியின் சிலம்பொலி என் செவிகளில் கேட்கிறது. அவள் அடியில் உயிரைவிடுவோரே வீரர். அவள் பொருட்டு உலக இன்பங்களைத்தவிர்ப்போரே துறவியர். அவள் நிலையை அறிவோரே ஞானியர். அவள் புகழைப்பாடுவோரே கவிஞர். பொன்னைப் போக்கலாம்; பெண்ணை நீக்கலாம்; மண்ணை மறக்கலாம். சுதந்தரத்தை இழக்க முடியுமோ? சுதந்தர மின்றி அடிமைகளாக நீங்கள் வாழ விரும்புகிறீர்களா? அல்லது சுதந்தரத்திற்காகப் போர் புரிந்து உயிரை விட விரும்புகிறீர்களா? முன்னது வேண்டுமாயின் பின்னல் பாருங்கள்; பின்னதுவேண்டுமாயின் முன்னல் நோக்குங்கள். [பொறுத்து] வீரர்களே! ஒருவன் தேசத்தின் பொருட்டு எல்லாத்தியாகங்களையும் செய்யவேண்டும். என் உடலிலுள்ள ஒவ்வொரு மயிர்க்காலுக்கும் ஒவ்வோர் உயிர் இருப்பின் அத்தனை உயிர்களையும் என் தாய் நாட்டிற்காக, சுதந்தரத்திற்காகப்பலி யிடுவேன். ஆனல், ஆண்டவன்-பாழும் ஆண்டவன்-எனக்கு ஓர் உயிரையே அளித்திருக்கிறான், இந்த அற்ப உயிரையும் என் தாய் நாட்டிற்கு அர்ப்பணம் செய்யாமலிருப்பேனே? நீங்கள் என்னைத் தலைவனுகக் கொண்டிருப்பது உண்மையானல் இந்த யுத்தத்தில் எங்ஙனமாவது வெற்றி பெற வேண்டும். பாணபுரத்தின் பண்டைய நிலையையும் தற்போது அஃது அடைந்திருக்கும் தாழ்ந்த நிலையையும் நீங்கள் கவனிக்க வேண்டு. நீங்கள் பாணபுரத்திலேயே பிறந்தவர்களாயிருந்தால், பாணபுரத்தின் எல்லைக்குள்ளிருக்கும் ஐம்பெரும் பூதத்தையும் நீங்கள் கட்டியாண்டதுண்மையானல், அதோ-அநியாயம், அதருமம், அசத்தியம் என்ற மூன்றனையும் குறிப்பதுபோல் முச்சக்கரங்களைக் கொண்டு அலையும் அதிரதருடைய கொடியை அறுத்து வீழ்த்தி இதோ பாண புரத்துச் சுதந்தரக் கொடியை நிலைத்து நிற்கச் செய்யுங்கள். [சில வீரர்கள் ஜெய, ஜெய கோஷத்திடையே பாணபுரத்துக் கொடியை அசுவத்தின் மீது ஆரோகணித்துக்கொண்டிருக்கும் புரேசனுடைய பக்கத்தில் நிறுத்துகிறார்கள்.] அதோ. அடிமைக்கொடி அலமருகிறது; இதோ சுதந்தரக் கொடி சுழல்கிறது. அதோ அதிரத அரசர் நால்வகைச்சேனையுடனும் கணக்கிலடங்காச் சில்லரைச் செல்வங்களுடனும் நம்மெதிர் நிற்கிறார். நமக்குப்பாடி வீடில்லை; நால்வகைப்பரிவாரங்கள் இல்லை; அரசபோகங்கள் இல்லை. நாம் உண்மையை ஆயுதமாகக்கொண்டிருக்கிறோம். அஞ்சாமையை அரணுகக் கொண்டிருக்கிறோம். நீங்கள் கையிலே கொண்டிருக்கும் சில்லரை ஆயுதங்களும் உங்களுடைய தாசங்களும் உண்மைக்கும் அஞ்சாமைக்கும் துணைக்கருவிகளேயாம். அதிரதர் அடிமைக்காகப் போர்புரிகிறார். நாம் சுதந்தரத்திற்காகயுத்தம் செய்கிறோம். ஆதலின் நீங்கள் உங்கள் உறுதியைக் கொண்டே வெற்றிபெற வேண்டும். சத்துருக்களின் படைத்தொகையைக் கண்டு நீங்கள் எவ்விதத்திலும் தளர்ச்சியுறவேண்டாம். சத்தியத்தின் முன் அசத்தியம் நில்லாது; நியாயத்தின் முன் அநியாயம் தோன்றாது. இவைகளை உள்ளத்தில் கொண்டு நீங்கள் உங்கள் காலை முன்வைக்கவேண்டும். அதோ! சத்துருக்கள் நம் கொடிதூக்கப்பட்டு விட்டதைக்கண்டு யுத்த சித்தம் செய்து கொள்கிறார்கள். நீங்கள் இனிச்சிறிதும் தாமதிக்கக்கூடாது. கடைசி முறையாகக் கூறுகிறேன். நாம் வணங்கும் தெய்வத்தின்மீது ஆணை; நாம் பிறந்த நாட்டின் மீது ஆணை; அந்நாட்டின் மீது நாம் கொண்டிருக்கும் பற்றின் மீது ஆணை; சத்தியத்தின் மீது ஆணை; தருமத்தின் மீது ஆணை; நாம் வாழ்ந்த வாழ்க்கையின் மீது ஆணை; நமது வீரத்தின் மீது ஆணை; நமது பெண்டிர் கற்பின் மீது ஆணை; நாம் போற்றும் வாலீசர் மீது ஆணை. இம்முறை நாம் யுத்தத்தில் வெற்றி பெற வேண்டும். அடிமை அகலவேண்டும். சுதந்தரம் உதயமாக வேண்டும். வீரபேரிகை அதிர்க! வெற்றி முரசம் ஆர்க்க! இன்னியங்கள் ஒலிக்க! [சேனைகள் அணிவகுத்துச்செல்கின்றன.]



# பண்டை இந்தியாவில் வெள்ளக்கஷ்ட நிவாரணம்

## எத்தகைய முறைகள் அநுசரிக்கப்பட்டன?

"ஒரு சரித்திரமாணவர்" எழுதியது

இந்திய அரசியல் நூலாகப்பெரிதும்கொண்டாடப்படும் கௌடில்யருடைய அர்த்த சாஸ்திரத்தில் வெள்ளப் பெருக்கு உண்டாவதைப்பற்றியும் அதற்குப் பரிகார முறைகள் என்னென்ன செய்ய முடியும் என்பதைப் பற்றியும் கூறப்பட்டிருக்கின்றன. நாட்டிற்கு ஆதி தெய்விக சம்பந்தமான துன்பங்கள் ஐந்து உண்டாகும் என்று கௌடில்யர் கூறுகிறார். அக்னி, உதகம் (வெள்ளம்) வியாதி, துர்பிட்சம் (பஞ்சம்) மாரகம் ஆகிய இவ்வைந்தினுலேயும் நாட்டிற்குத் தீங்குகள் நேரலாமென்று இவர் தெரிவிக்கிறார். இவைகளில் நெருப்பினுலும் வெள்ளத்தினுலும் ஏற்படும் சேதங்கள் மிகமுக்கியமானவையென்றும், நெருப்பினுல் உண்டாகும் சேதத்திற்குப் பரிகாரம் செய்ய முடியாதென்றும் வெள்ளத்தினுல் ஏற்படும் கஷ்டங்களை ஒருவாறு நீக்கலாமென்றும்கௌடில்யருடையஆசிரியர் அபிப்பிராயப்படுகிறார். ஆனல் கௌடில்யர், தம் ஆசிரியருடைய அபிப்பிராயத்திற்குமாறாக நெருப்பினுல் உண்டாகும் சேதம் ஒரு கிராமத்தையோ அல்லது ஒரு தனி இடத்தையோ பாதிக்கு மென்றும் ஆனல் வெள்ளம் அநேக ஆயிரகிராமங்களையும் பாதிக்கக்கூடு மென்றும் அபிப்பிராயப்படுகிறார்.

* * *

தேசத்திற்குப் பொதுவான துன்பங்களில் வெள்ளமும் ஒன்றுஎன்று கௌடில்யர் அபிப்பிராயப்படுவது முற்றிலும் பொருந்தும்.ஜனங்கள் வெள்ளத்தினுல் கஷ்டப்படும் பொழுது, அவர்களுடைய துன்பங்களை உடனே பரிகரிக்க வேண்டுமென்றும், ஏனென்றால் இவர்களிடத்திலிருந்து பணம், பொருள், தொழில், சேனை முதலியன கிடைக்கின்றனவென்றும் விசாலாட்சர் என்ற ஓர் அரசியல் நிபுணர் அபிப்பிராயப்படுகிறார் தெய்விக சம்பந்தமான வெள்ளம் முதலிய துன்பங்கள் எவையேனும் நேர்ந்துவிட்டால், ஜனங்களுக்கும் அவர்களுடைய சொத்துக்களுக்கும் உடனே பாதுகாப்பு கொடுக்க வேண்டுமென்றும், முதலில், தங்களுடைய கஷ்டத்தைப் போக்கவேண்டுமென்று ஜனங்கள் கடவுளைப் பிரார்த்தித்துக் கொள்ள வேண்டுமென்றும், அதர்வ வேதத்தில் கூறியுள்ளபடி சில சடங்குகளைச் செய்ய வேண்டுமென்றும் கௌடில்யர் அபிப்பிராயப்படுகிறார். மற்றும் வெள்ளத்தாலோ நெருப்பினுலோ துன்புற்ற ஜனங்களுக்கு அவைகளால் துன்புறாத ஜனங்கள் வேண்டிய உதவிகளைச் செய்ய வேண்டுமென்றும், இங்ஙனம் உதவி செய்வோருக்கு அரசாங்கத்தார் போதிய பணம் கொடுக்க வேண்டுமென்றும் சொல்லப்பட்டிருக்கின்றன. ஜனங்களில் எவரேனும் சம்மாலியன்ற உதவியைச் செய்ய மறுத்தால் அவர்கள்மீது கடுமையான நடவடிக்கைகள் எடுத்துக்கொள்ளப் பட்டனவென்றும் சொல்லப்பட்டிருக்கின்றது. மற்றும் இங்ஙனம் உதவி செய்ய முன்வந்த ஒருவன் தலைமை பூண்டு ஒரு காரியத்தைச் சொன்னுல் அதற்கு எல்லாரும் கீழ்ப்படிந்து நடக்கவேண்டும் என்றும் கூறப்பட்டிருக்கிறது 'எவனெருவன் பொது நன்மைக்காக உழைக்கிருனே அவனுடைய வார்த்தையை எல்லாரும் கேட்க வேண்டும்' என்று யாக்ஞவல்கியர் தெரிவிக்கிறார்.

* * *

ஆற்றோரங்களில் குடியுள்ள கிராமத்தார்கள் மழை காலங்களில், வெள்ளத்தினுல் பாழாக்கக்கூடாத பிரதேசங்களில் குடியேறி வசிக்கலாமென்றும், படகுகள், மூங்கில்கள், மரப்பலகைகள் முதலியவைகளை அனைவரும் வைத்துக் கொண்டிருக்க வேண்டு மென்றும் இங்ஙனம் வைத்துக் கொண்டிருப்போர், வைத்துக் கொண்டிராதவர்களுக்கு வேண்டிய உதவிகளைச் செய்யவேண்டுமென்றும், படகுகள் முதலியவைகளை வைத்துக்கொண்டிருப்போர், வெள்ளத்தினுல் அடித்துக் கொண்டு போகப் பட்டவர்களை மீட்காமற்போனுல் பன்னிரண்டு பணம் அபராதம் விதிக்கப்படுவர் என்றும் அர்த்தசாஸ்திரம் கூறுகிறது. வெள்ளப் பெருக்கெடுத்தோடும்போது வேதத்தை அறிந்தவர்கள், எப்பொழும் ஜபம் செய்து கொண்டிருக்கவேண்டு மென்று அடிக்கடி வற்புறுத்திக் கூறப்பட்டிருக்கிறது. மற்றும் ஒவ்வோர் இடத்திலும் கஷ்டப்பட்டவர்கள், அந்தந்த இடத்தினராலேயே உதவி செய்யப்படவேண்டு மென்றும், இத்தகைய தேசப்பொதுவான கஷ்டங்களில் ஜனங்கள் ஒற்றுமையாயிருந்து வேண்டிய உதவிகளை ஒருவர்க்கொருவர் செய்துகொள்ள வேண்டுமென்றும் பல நூல்கள் வற்புறுத்திக் கூறுகின்றன.

மதுரையில் வரகுணபாண்டியன் ஆட்சி செய்து கொண்டிருந்த காலத்தில் வைகையாறு திடீரென்று வெள்ளப் பெருக்கெடுத்தோட ஆரம்பித்தது. உடனே ஜனங்கள் பயத்தினுல் கூக்குரலிட ஆரம்பித்தார்கள். அரண்மனையிலிருந்த பாண்டிய மன்னன், இதனைக் கேட்டு வெளிவந்து பார்த்த போது. தெருக்களில் ஜலம் பெருகியோடுவதைக் கண்டான். உடனே, தனது மந்திரி மார்களை அழைத்து, நகரத்திற்குள் ஜலம்வரவொட்டாதபடி தடுத்து ஒரு பெரிய அணைபோடும்படி உத்தரவு செய்தான். உடனே மந்திரிமார்கள் எங்கு உடைப்பு எடுத்துக்கொண்டிருக்கிறதோ அங்குச் சென்று, ஜனங்களை அழைத்து மண்ணையும் மணலையும் போட்டு ஓர் அணை கட்ட வேண்டுமென்ற தங்கள் முயற்சியில் அனைவரும்உதவிசெய்யவேண்டுமென்றுகேட்டுக்கொண்டார்கள். உடனே ஒவ்வொருவீட்டுக்காரரும் இம்முயற்சியில் ஈடுபட்டுஉழைக்கலானார்கள். அறுபது அடி உயரம் இந்த அணையை எழுப்ப வேண்டியிருந்தது. பணக்காரர்கள் இரண்டு தொழிலாளர்களையும் மற்றக் குடியானவர்கள் ஒவ்வொரு தொழிலாளியையும் உதவ வேண்டுமென்று விதிக்கப்பட்டது. எனவே, சில மணி நேரத்திற்குள் அநேகர் கூடி, ஜனகன் என்ற உத்தியோகஸ்தன்கீழ் மேற்கூறப்பட்ட வேலையைச் செய்யத் தொடங்கி விட்டார்கள். இந்த உத்தியோகஸ்தன் தொழிலாளர்களை நோக்கி "உங்களுக்கேற்பட்ட பங்குப்படி, மண் மூட்டையாலும் மணல் மூட்டையாலும் கரையை நிரப்புங்கள். இதைச் செய்யாவிட்டால் அரசர் உங்களுக்குக் கடுமையான தண்டனை விதிப்பார் இவ்வேலைகள் எவ்வளவுதூரம் நடைபெற்றிருக்கின்றனவென்பதை மேற்பார்வை செய்ய அரசர் உடனே இங்கு வருவார்." என்றுகூறி வேலை வாங்கினான். இதனுல், அரசர் ஜனங்களுடைய துன்பத்தைப் பரிகரிக்க எவ்வளவு முயற்சிகள் எடுத்துக் கொண்டார் என்பது நன்கு புலனுகும்.

* * *

முற்காலத்தில், வெள்ளக் கஷ்ட நிவாரண முறைகள் எங்ஙனம் அநுசரிக்கப்பட்டன வென்பதற்குச் சில சாஸன ஆதாரங்களும் இருக்கின்றன. குப்த வம்சத்தைச் சேர்ந்த ஸ்கந்த குப்தன் என்பவனுடைய ஆட்சியில், விடா மழை பொழிந்துகொண்டிருந்ததன் பயனுக சுதர்சனம் என்ற ஏரி உடைப்பெடுத்துக் கொண்டது. மற்றும் ரைவதகம் என்ற மலையினின்று எழுந்த ஆறுகளின் இருகரைகளிலும் வெள்ளம் புரண்டோடியது. பத்ரினி என்ற ஓர் ஆறும் இது சம்பந்தமாகக் கூறப்பட்டிருக்கிறது. ஜனங்கள் கவலைமேலீட்டினுல் ஒரு நாள் இரவு முழுவதும் கண் விழித்துக் கொண்டிருந்தார்களென்றும், அரச குமாரனை சக்ர பாலிதன் என்பவன் ஜபம் செய்யும்படி ஏற்பாடு செய்ததாகவும், பிராமணர்கள் முதலானவர்களுக்குப் பற்பல தானங்களை வழங்கினுன் என்றும் சாஸனம் கூறுகிறது. நூறு முழ நீளமும் அறுபத்தெட்டடி அகலமும் ஏழு ஆள் உயரமும் உடைய ஓர் அணை ஏராளமான பணச் செலவுடன் கட்டப்பட்டதென்றும சொல்லப்பட்டிருக்கிறது. இந்த அணை கட்டி முடிந்ததும், அந்த ஏரியைச் சுற்றியிருந்த கிராமங்கள் செழிப்புற்றன என்றும் அநேக ஆண்டுகள் இந்தப் பிரதேசத்தில் வெள்ளப் பெருக்காவது பஞ்சமாவது உண்டாகவில்லையென்றும் தெரிகின்றன. (ஹிந்து)

## லார்ட் லிட்டனின் கடிதம்

'ஆனந்தபஜார் பத்திரிகை'யில் பின்வரும் விஷயம் காணப்படுகிறது :—

இந்திய ஸ்திரீகளை அவமதித்து லார்ட் லிட்டன் (டாக்டர் தாகூருக்கு) எழுதிய கடிதம், அரசாங்கக் காரியாலயத்தில் ஆகஸ்ட் மாதம் இரண்டு அல்லது மூன்றாந் தேதி தயாரிக்கப்பட்டது. இந்தக் கடிதத்திற்கு ஆறு பிரதிகள் எடுக்கப்பட்டு இராஜ பக்தியுள்ள சில வங்காள கனவான்களுக்குக் காண்பிக்கப்பட்டது. அவர்கள் அதனை அங்கீகரித்துவிட்டார்கள். இதை எங்ஙனம் வெளியிடுவதென்பதைப்பற்றி யோசிக்கப்பட்டது இந்த விஷயத்தில் தாம் எவ்விதத்திலும் கலந்து கொள்ள முடியாதென்று ஸர் தேவ பிரசாத் சர்வாதிகாரி கூறிவிட்டார். மஹாராஜா சௌனிஸ் சந்திரர், டாக்டர் ரவீந்திரநாத் தாகூரின் பெயரைக் குறிப்பிட்டார். ஆனல் கவியரசர், அரசாங்க மாளிகைக்குச் செல்ல முடியாதென்று இரண்டு முறை மறுத்துவிட்டார். கடைசியில் ஸ்ரீமான் பஸ்லுல் ஹக் ஜன்மாஷ்டமி தினத்தன்று டாக்டர் தாகூரிடம் சென்று அரசாங்க மாளிகைக்கு வரும்படி நிரம்பக் கேட்டுக்கொண்டார். பிறகு டாக்டர் தாகூரும் லார்ட் லிட்டனும் சம்பாஷித்ததன் பயனுக முன்னவர் கடிதத்தை எழுத ஒப்புக் கொண்டார். உடனே இருவருடைய கடிதங்களும் ஒரேதினத்தன்று பத்திரிகைகளுக்கு அனுப்பப்பட்டன.

# பெரிய குளம் தாலூகா மகா நாடு

## அக்கிராசனர் உபந்நியாசம்

சென்ற சனிக்கிழமையன்று சின்னமனூரில் நடைபெற்ற பெரிய குளம் தாலூகா மகாநாட்டில் டாக்டர். தி. சே. சௌ. ராஜன் தலைமை வகித்துச் செய்த பிரசங்கத்தின் சாரமாவது :—

### மகாநாடுகளின் வேலை

வருஷமொருமுறை கூடும் இம்மகாநாடுகள் எதற்காக எனபதே அநேகருக்கு இன்னும் விளங்கவில்லை எனத்தோன்றுகிறது. சுருங்கச் சொல்லின் தாலூகா மகாநாடுகளின் அவசியம் அத்தாலூகாவில் நடந்திருக்கும் வேலையை ஒட்டியது.

(1) மகாநாடுகளின் மூலமாக காங்கிரஸ் கொள்கைகளை கிராமங்களில் பரவச்செய்வது.

(2) தேசிய சபைகளை ஆங்காங்கு ஸ்தாபனம் செய்து அந்தந்த ஸ்தாபனங்களுக்கு பொதுஜன மதிப்பு உண்டாக்குதல்.

(3) தேசியஇயக்கத்தில் ஸ்வராஜ்யமடைவதற்காக எந்தெந்த முறைகளை அனுஷ்டிக்கும்படி காங்கிரஸ் என்னும் தேசீய மகாசபை தீர்மானிக்கிறதோ அவைகளை அந்தந்த காலத்திற்குள் திட்டப்பிரகாரம் நிறைவேற்றுதல்.

(4) நடக்கும் வருஷத்தில் செய்திருக்கும் வேலையின் அறிக்கையை வெளியிடுவது. அந்த அறிக்கையில் கீழ்க்கண்ட விபரங்கள் கண்டிருக்கவேண்டும்.

க. தாலூகாவில் காங்கிரஸ் சபையின் மொத்த அங்கத்தினர்கள்.

உ. வரவு செலவு கணக்குகள்.

ங. ஓடிக்கொண்டிருக்கும் கைராட்டினங்களின் தொகை, நூல் உற்பத்தியின் தொகை, கத்தர் நெசவின் அளவும் விபரமும்.

ச. தீண்டாமை விஷயமாகச்செய்திருக்கும் வேலைகள்.

ரு. மதுவிலக்கின் கீழ் குடிப்பதை விட்டவர்களின் தொகை. மங்கள் குத்தகைக்கு விடாமலிருப்பவர்கள் தொகை. கள்ளுக்கடைகள் குறைந்ததின் விபரம், ஜாதிக்கட்டுப்பாடுகள் விபரம்.

சா. தேசிய பஞ்சாயத்து சபைகளும் அவைகளின் வேலையும்.

எ. தேசிய பள்ளிக்கூடங்களும், அதில் படிப்பவர்களின் தொகையும்.

(5) சென்ற வருஷத்தில் வேலை செய்த தின் பயனுக்கு இனி வரும் வருடத்திய வேலை எவ்விதம் நடைபெற வேண்டுமென்று அதற்கேற்ற தீர்மானங்களைச் செய்தல்.

(6) செய்த தீர்மானங்களை நிறைவேற்றுவதற்காக பொறுப்புள்ள நிர்வாகிகளை அங்கத்தினராக தேர்ந்தெடுத்தல்.

ஒவ்வொரு மகாநாட்டிலும் அத்தாலூக்கா காங்கிரஸ் சபை காரியதரிசியால் இந்த விபரமெல்லாம் முதலில் படிக்கப்பட்டு, அந்த அறிக்கையில் குற்றம் குறைகளிருந்தால் அவைகளை மறுமுறை ஏற்படாத வண்ணம் அதற்கு தகுந்தவாறு வழிகளை விவரித்துப் பேசி தீர்மானிக்க வேண்டும். ஆனால் தற்காலம் நடந்து வரும் மகாநாடுகளில் முக்கியமாய் பிரசாரம் மட்டில் நடப்பதைத் தவிர மற்ற விஷயங்கள் கவனிக்கப்படவில்லை. இதற்கு முக்கிய காரணம் காங்கிரஸ் வேலையை ஊக்கத்துடன் செய்வதற்கு போதுமான உண்மை தேசபக்தர்களும், அவர்களுக்கேற்ற பக்கபலமும் இல்லாததுதான். காங்கிரஸ் என்பது சுயராஜ்யம் சம்பாதிக்கும் ஒரு கருவியாகும். அது ஜனங்களின் மனோதர்மத்திற்கேற்ப சமயோசிதம்போல எந்தெந்த முறைகளை கையாளவேண்டுமோ அவைகளை அமைதியுடன், நியாயமாகக் கையாடல் வேண்டும். நாம ஒவ்வொரு வருஷமும் சுயராஜ்யம் சம்பாதிப்பதற்காக எவ்வளவு பாடுபட்டிருக்கிறோமென்பதைக் கணக்கிடுவதற்காக இம் மகாநாடுகள் தேவை. அக்கணக்கில்லா விட்டால் சொற்பொழிவு செய்த்தும் வெறுங் கூட்டமேயாகும்.

### மகாத்மாவின் உபதேசம்

சுயராஜ்ய மென்பதற்கு நம்மை நாமே ஆட்சி புரிவது என்பது பொருள். அதை ஒருவரும் நமக்கு அளிக்கமுடியாது. நாமே நம்முடைய முயற்சியால் பெறவேண்டும். சுயராஜ்யத்திற்கு நாம் உரியவர்களாவது அதைப் பெறும் சக்தியை நம்மிடம் உற்பத்தி செய்து கொள்ள வேண்டும். மேலும் சுயராஜ்யம் கிடைத்தாலும் அதை வைத்து காப்பாற்ற சக்திவேண்டும். அதை சம்பாதிக்கும் முறையிலேயே அதைக்காப்பாற்றும் பலத்தையும் பெறவேண்டும். ஆனால் சுயராஜ்யமென்பது ஒரு சிலரால் விரும்பப்பட்டால் மாத்திரம் போதாது. பெரும்பான்மையோரால் விரும்பப்படவேண்டும். அதை பெறவிருக்கும் முறையும் பெரும்பான்மையோராலேயே கையாளப்படல் வேண்டும். ஆங்கிலம் பயின்ற ஒரு சிலர் கைப்பற்றினுல் மாத்திரம் பிரயோஜனம் கிடைக்காது. அவர்கள் அம்முறைப்படி நடக்காவிட்டால் ஆங்கிலம் தெரியாத பெரும்பான்மையோரால் அனுஷ்டிக்கப்பட்டால் சுயராஜ்யம் கிடைக்கும். காந்தியடிகள் சிறை செல்வதற்கு முன்பாக யிருந்த சுயராஜ்ய ஊக்கமும், அவர் சிறை சென்றபின் தேசத்தில் அவர் சிறை மீண்டு வெளிவந்து தேச நிலைமையை கவனிக்கும்கால் தான செய்த உபதேசம் வீரியம் குன்றி, சுதந்திர தாகம் அடங்கி, இந்து முஸ்லிம் ஒற்றுமை சிதைந்து, நாடு சீர்குலைந்து இருப்பதைக்கண்டார். அதற்காக நம்மை சில காரியங்கள் உடனே செய்யவேண்டுமென்று வற்புறுத்தியிருக்கிறார். அவைகளில் முக்கியமாக நாம் கவனம் செலுத்த வேண்டியது மூன்று உண்டு.

### கத்தர் இயக்கம்

கத்தர் இயக்கம் மேன்மைபெறும் நிமித்தம் தேச நன்மையை உத்தேசித்து காங்கரஸ் நிர்வாகிகள் ஒவ்வொருவரும் தினசரி குறைந்தது அரையணிநேரம் ராட்டையில், சரியான முறுக்குள்ளதும் பத்து நெம்பருக்கு குறையாததுமான நூலை நூற்று மாதமொன்றுக்கு 2000 கெஜம் நூல் நூற்று காந்தியடிகளுக்கு அனுப்ப வேண்டும். இதில் நிர்வாகிகள் மட்டும் நூற்கவேண்டு மென்று நிபந்தனையிருந்த போதிலும் கத்தர் இயக்கத்தில் ஈடுபட்டுள்ள மற்றவர்களும் நூல் நூற்று அனுப்பலாம். இந்நூலை துணியாக நெய்து ஏழைகளுக்கும், வெள்ளச்சேதத்தினால் உடுக்க உடையின்றி வருந்துபவர்களுக்கும் சொற்பத் தொகைக்கோ அல்லது தர்மமாகவோ உடை அளிக்க உபயோகப்படுத்துவார். கத்தர் இயக்கம் ஒருவாறு இதனால் பெருகுவதோடுகூட ஏழைகளுக்கும் ஒர் நிரந்தர தர்மம் ஏற்படும். கத்தர் இயக்கத்தின் பயனை காந்தியடிகள் பின் வருமாறு கூறுகின்றார்.

1. ராட்டினமானது கொஞ்சம், அவகாசமிருந்து எதாகிலும் தொழில் செய்ய இஷ்டப்பட்டவர்களுக்கு வேலை கொடுக்கும். அதோடு அவர்கள் கைக்கு கொஞ்சம் துட்டும் சம்பாதித்துக்கொடுக்கும்.

2. நூல் நூற்பது புதிதாக கண்டுபிடிக்க வேண்டிய வேலையல்ல. ஏற்கனவே அநேக ஆயிரம் ஜனங்களுக்கு தெரிந்திருக்கும் வேலை.

3. கற்றுக்கொள்வது மிகவும் சுலபம்.

4. இதற்கு போடவேண்டிய முதல் மிகவும் சொல்பம்.

5. ராட்டினமானது குறைந்தத்தொகையில் சிறு கிராமங்களில் கூட செய்ய முடியும். ஒரு உடைந்த தடியும், ஒரு சிறு செம்புத்தட்டும் நூற்பதற்கு போதுமானது.

6. ஜனங்களுக்கு இந்த வேலையில் வெறுப்பு கிடையாது.

7. பஞ்சம் முதலிய கஷ்டங்களுக்கு உடனே உதவி செய்யக்கூடியது.

8. அன்னியநாட்டுத் துணியை வாங்குவதால் உண்டான பொருள் நஷ்டத்தை உடனே தடுக்கிறது.

9. இப்படி மிச்சமாகும் கோடானுகோடி தொகையை ஏழைகள் வயிற்றில் போடுகிறது.

10. இந்த இயக்கம் கொஞ்சம் பலன போதிலும் பலனைப்பட்டில் லாபத்தைக் கையில் தரக்கூடியது.

11. ஜனங்களுள் ஒற்றுமை ஏற்படுத்துவதற்கு இது ஒரு பெருங்கருவியாகயிருக்கிறது.

12. சுயஜாதி பெண்மையைக் காப்பாற்றும் சக்தி இதற்குண்டு. இவ்வித லாபத்தை நோக்குங்கால் நூல் நூற்பது எப்பொழுது பாழாகுமென்று சொல்ல எவர் முன்வருவார் என்று தோன்றவில்லை. இந்த உபதேசத்தை தேச முன்னேற்றத்திற்காக ஒரு பெரியார் செய்துங்கூட முன்வராதவர்கள் சுயராஜ்யத்திற்கு யோக்யதையுள்ளவர்களாக மாட்டார்கள்.

### தீண்டாமையை ஒழிப்பது

இரண்டாவதாக காந்தியடிகள் தீண்டாமை எனனும் வழக்கம் முக்கியமாய் இந்துக்களால் அனுஷ்டிக்கப்பட்டு வருகிறது. ஒழியவேண்டுமென்கிறார். இதைக்கேட்டவுடன் நம் ஜாதியார்கள் அநேகர் பிரமித்துவிடுகிறார்கள். தீண்டாமையை ஒழிப்பதென்பது ஜாதிதர்மத்தை புரட்டிவிடுவதாக நினைக்கிறார்கள். ஆனால் தீண்டாமை வழக்கம் எவ்வளவு தூரம் நம்மை அடிமையாக்கி, சுயராஜ்யம் கிடைப்பதற்கு முட்டுக்கட்டையாக நின்று கொண்டிருப்பதை நம்மவர்கள் உணர்ந்தால் அதன் தத்துவம் நன்குவிளங்கும். தீண்டாத ஜாதியில் ஆறு கோடி ஜனங்களிருக்கிறார்கள். அதாவது நம் தேசத்து ஜனத்தொகையில் தீண்டப்படாதார் ஆறில் ஒரு பங்காக யிருக்கிறார்கள். அவர்களில் பெரும்பான்மையோர் ஏழைகள். சுயராஜ்யமென்பது முக்கியமாக ஏழைகளுக்குத் தான் தேவை. சுயராஜ்யத்தில் எல்லோருக்கும் சம உரிமை உண்டு. ஆறில் ஒரு பங்கான நம் தேசத்தவர்களுக்கு தீண்டக்கூடாதென்பதாக விதி ஏற்படுத்தினுல் சம உரிமை அவர்களுக்கு நாம் எப்படி அளிக்க முடியும். தீண்டாமை ஒழிப்பதென்றால் அதன் பொருள் என்ன.

1. நாம் அவர்களுடன் உண்டு, உடுத்து, கலப்பது என்று பொருளில்லை.

2. நாம் அவர்களுடன் கொண்டு, கொடுத்து உறவு கொண்டாடுவது என்று பொருளில்லை.

3. ஆனால் அவர்களுக்கு பொது ஸ்தலங்களில் போகவும் வரவும் நமது சமீபத்தில் மற்ற மனிதர்களைப்போல் அவர்களும் நடந்து கொள்ளும் சுதந்திரமளித்தல்.

கிணறு, ஆறு, குளம் மற்ற இடங்களில் அவர்களுக்கு தண்ணீர் எடுத்துக்குடிக்க அநுமதித்தல். கிராமங்களில் பன்றி, மாடு இவைகள் எந்த குளத்திலும் தண்ணீர் குடிக்கக் கூடும். ஆனல் அதே இடத்தில் மனிதரான தீண்டாத ஜாதியார் நெருங்கக்கூடாது என்கிற நிபந்தனை இருக்கிறது. மேலும் தீண்டாத ஜாதியார் இந்து மதத்தை விட்டு வேறு மதத்திற்குப் போய் விட்டால் அவர்களுக்கு தீண்டாமை ஒழிந்து விடுகிறது. இந்துக்களும் அவர்களில் தீண்டாமையை அனுஷ்டிப்பதில்லை.

4. தீண்டாத ஜாதியார் கையால் உணவு முதலியவைகளைச் சாப்பிட்டு வரும் ஐரோப்பியர்களை நம்மில் உயர்குலத்தவர்கள் தங்கள் தலைமேல் வைத்து கூத்தாடுகிறார்கள்.

5. இந்துமதம் இதனல் பலவீன மடைந்து வருகிறது. நாம் உலகத்தில்நம்மைப்பார்ப்பவர்களுக்கும்நகைப்புக்கிடமாகயிருந்து வருகிறோம்.

9. இந்துக்களுடைய ஜனத்தொகை நாளுக்கு நாள் குறைந்து. இதர மதத்தினர்தொகை கூடிவருகிறது. இதற்கு காரணம் தீண்டாமையே.

7. தீண்டாமையென்பது நமது சாஸ்திரங்களில் கிடையாதென்று நம் பெரியோர்கள் அநேகர் கூறுகின்றார்கள்.

8. தீண்டாத ஜாதியென்பவர்களிலும் தெய்வத்தன்மை பொருந்திய பக்தர்களும், புண்ணிய சீலர்களும் தோன்றியுள்ளார்கள். தெய்வத்திற்கு ஜாதி கிடையாது.

9. நம்மில் அநேகர் தீண்டாத ஜாதிகளிடம் அநேக கெட்ட வழக்கங்கள் இருக்கிறது, அதனுல் தான் அவர்கள் தீண்டப்படாதவர்களென்று சொல்லுகிறார்கள். இதுநியாயமான ஆட்சேபமில்லை. மேல் குலத்தோரில் கெட்ட வழக்கங்களை அனுஷ்டிப்பவர்களை நாம் தள்ளிவைப்பதில்லை. மேலும் நம் தேசத்தினிடத்தில் ஒருவகுப்பார்களுக்குள் கெட்ட வழக்கம் இருப்பின் அதை வேரற ஒழித்து அவர்களை மேம்பாடாக வைப்பதும் மேல் ஜாதியாரின் கடமையன்றோ.

10. வள்ளுவனர் குறளும், பாணன் பிரபந்தமுமில்லாது போனல் தமிழ் பாஷைக்கு மணம் உண்டோ ? அப்பெரியார்கள் தீண்டாத ஜாதியாரில்லையா ?

இதையெல்லாம் தீர ஆராய்ந்து நோக்குமிடத்தில் நம் தேச முன்னேற்றத்திற்கு இன்றியமையாத முதற்படியாகத் தீண்டாமை ஒழிதலைக் கைப்பற்றவேண்டும். காந்தியடிகளும் அதையே தான் நம் நாட்டினருக்கு அடிக்கடி வற்புறுத்திகிறார்கள்.

மூன்றுவதாக காந்தியடிகள் நம் தேசத்திலடங்கிய பல மதத்தினருள்ளும் ஓர் ஒற்றுமை ஏற்படவேண்டும் என்று சொல்லுகிறார்கள். முக்கியமாய் இந்துக்களும் முஸ்லீமகளும் ஒற்றுமையாய் வாழவேண்டும். நாம் இருவரும் சண்டையிட்டுக் கொண்டால் அன்னிய அரசாங்கம் சாசுவதமாய் இங்கேயே யிருப்பதற்கு அஸ்திவாரம் போட்டதுபோலாகும். நம்முள் ஒற்றுமை யேற்படாத வரையில் நாம் சுயராஜ்யத்திற்கு தகுதியற்றவர்களாவோம்.

### காங்கிரஸ் கமிட்டி வேலை

இம்மூவகை வேலைகளில் இதுவரையில் தமிழ்நாட்டுக் காங்கிரஸ் கமிட்டியார்கள் செய்திருக்கும் வேலையும் தாங்கள் அறியவேண்டியது அவசியமாகும். ஏனெனில் காந்தியடிகளின் முறையில் அந்தரங்க நம்பிக்கையில்லாமலும், காங்கிரஸ்காரர்கள் என்னும் பெயர் சாற்றிக்கொண்டும், வைதீக ஒத்துழையாதார் என்றும் பலவாருக தற்காலம் காங்கிரஸ் வேலையை இந்நாட்டில் நடத்திவரும் கமிட்டியாரின்பேரில் அவதூறு சொல்வதையே தங்கள் தேசத்திற்கு செய்துவரும் தொண்டாக சிலர் மேற்கொண்டிருக்கிறார்கள். அவர்களின் விஷம புத்தியால் அநேகர் மனம் கலங்கவும் கூடும். தமிழ்நாட்டுக் காங்கிரஸ் கமிட்டியாரின் வேலையைப்பற்றி வருடமொருமுறை அறிக்கை வெளியிட்டு வந்த போதிலும்கூட கிராமங்களுக்கும், தாலூகாக்களும் அவர்கள் வேலை எட்டுகிறதில்லை. ஆகையால் இம்மகாநாட்டில் அதைப்பற்றி சொல்லவேண்டியதும் அவசியமாயிற்று.

கத்தர் இயக்கத்தை தனியே கவனிக்கும் பொருட்டு ஒரு சிறு போர்டு ஸ்தாபித்திருக்கிறார்கள். இப்போர்டார் செய்திருக்கும் முக்கிய வேலைகள்.

1. கத்தர் உற்பத்தி செய்து, நாடெங்கும் பரப்புவதற்காக, கைராட்டின நூல் ஏராளமாக உற்பத்தியாகிற திருப்பூரில் தலைமை ஸ்தானத்தை ஏற்படுத்தி யிருக்கிறார்கள். பருவ காலங்களில் பஞ்சு வாங்குவதற்காக பண்டக சாலையும் இருக்கிறது. அதில் தற்சமயம் சுமார் 25,000 ரூபாய் மேலாக பஞ்சு சேகரித்து வைக்கப்பட்டிருக்கிறது.

2. மாதத்திற்கு குறைந்தது 50,000 ரூபாய் வரையில் கத்தர் உற்பத்தியாகிறது.

3. உண்டாகும் கத்தரை விற்பனை செய்வதற்காக திருப்பூரில் காங்கிரஸ் கத்தர் சாலை ஒன்று ஸ்தாபிக்கப்பட்டிருக்கிறது.

4. மற்ற ஜில்லாக்களிலும் நம் நாட்டில் தற்சமயம் எட்டு கிளைக் கத்தர் சாலைகள் ஏற்படுத்தப்பட்டு அங்கு கத்தர் விற்பனைக்கு கொடுக்கப்பட்டு வருகிறது.

5. பஞ்சு அதிகமாய் உற்பத்தியாகுமிடங்களில் பஞ்சு வாங்கி வைக்கவும், நூற்கும் நூலை வாங்கி துணியாக நெய்யவும் ஆங்காங்கு ஏற்பாடு செய்யப்பட்டு வருகிறது.

6. கத்தர் அபிவிருத்தியின் பொருட்டு கிராமங்களில் சென்று ராட்டினங்களை உயிர்ப்பித்து அந்தந்த கிராமத்தார்களுக்கு தேவையான உடை அக்கிராமத்திலேயே உண்டாகும் பொருட்டு பிரசாரகர்களை தயாரிப்பதற்காக இரண்டு இடங்களில் ஆசிரமங்கள் ஏற்பட்டுள்ளன. இந்த ஆசிரமங்கள் ஒன்று கோயமுத்தூர் ஜில்லாவில் காஞர் என்னும் கிராமத்திலும் மற்றொன்று சேலம் ஜில்லாவில் புதுப்பாளையம் கிராமத்திலும் நடைபெற்று வருகிறது. சேலம் ஜில்லாவில் நடைபெறும் ஆச்சிரமம் தேசபக்தரும், அகில இந்திய காங்கிரஸ் கமிட்டி மெம்பரும் மிட்டாதாருமான ஸ்ரீமான் ரத்னசபாபதிக் கவுண்டர் அவர்களுடைய தர்ம கைங்கர்யம். இந்த ஆச்ரமங்களில் பஞ்சு கொட்டுதல், நூல் நூற்றல், நெய்தல் எல்லாம் சொல்லிவைக்கப்பட்டு வருகிறது. இரண்டு இடத்திலும் நாற்பது பெயாகள் வேலை பயின்று வருகிறார்கள்.

7. கத்தர் ஜவுளிகளை கிராமந்தோறும் எடுத்துச்சென்று விற்பவர்களுக்கு தக்க கமிஷன் கொடுக்கப்பட்டு வருகிறது.

8. சுமார் இரண்டு லக்ஷம் ரூபாய் வரையில் கத்தர் வேலையில் முதலாக வைத்து வேலை நடைபெற்று வருகிறது. இதைப்பற்றிய விபரங்கள் தெரிந்துகொள்ள விரும்புவோர் தமிழ்நாட்டு காங்கிரஸ் கத்தர் டெப்போ காரியதரிசி, திருப்பூர், என்ற விலாசத்திற்கெழுதி தெரிந்துகொள்ளலாம்.

9. சுயம் கத்தர் உற்பத்தி செய்து விற்பவர்களுக்கு நற்சாட்சி பத்திரங்கள் கொடுக்கப்பட்டு வருகிறது. இது போலி கத்தர் பரவாமலிருப்பதற்காக கொடுக்கப்படுகிறது.

தீண்டாமை ஒழிப்பதற்காக அதற்கென்று ஒதுக்கிவைக்கப்பட்டிருக்கும் நிதியிலிருந்து தீண்டாத ஜாதியார் பிள்ளைகள் மற்ற ஜாதிப் பிள்ளைகளுடன் சரிசமானமாக நடத்தப்படும் பள்ளிக்கூடங்களுக்கு உபகார சம்பளம் ஒவ்வொரு பையனுக்கும் 10 ரூபாய்வீதம் கொடுப்பதாக தீர்மானம் செய்திருக்கிறது. இந்த பள்ளிக்கூடங்களில் முனிசிபல், ஜில்லா போர்டு அல்லது தனி நபர்களாலே நடத்தப்பட்ட பள்ளிக்கூடங்களாக இருந்தபோதிலும் இந்த கிராண்டு அளிக்கப்படும்.

இம்மகாநாட்டிற்கு விஜயம் செய்திருக்கும் பிரதிநிதிகள் முக்கியமாய் சில தீர்மானங்கள் செய்யவேண்டும்.

1. மகாத்மாவின் திட்டம் நாம் ஒத்துக் கொள்ளுகிறோமா ?

2. அப்படி ஒத்துக்கொண்டு அதற்கு வாக்கு கொடுக்கும் டகூத்தில் அவர் சொல்லுகிறபடி நூல் நூற்று தீண்டாமையை ஒழித்து அஹிம்சா தர்மத்தில் நம்பிக்கை வைத்து அவர் சொல்லியபடி நிர்மாண திட்டத்தை பூர்த்தி செய்து, தேவையானல் கடைசி முறையாக சத்தியாக்கிரகம் செய்ய நாம் தயார்த்துக் கொள்ள எண்ணமிருக்கிறதா ? அப்படியானல் அதற்கேற்ற தீர்மானங்களைச்செய்து முடிக்க வேண்டும்.

3. அப்படி யில்லாவிட்டால் காங்கரஸ் கொள்கை, முறை, இவைகளை மாற்றி அமைக்கவேண்டும். மகாத்மாகாந்தியின்முறை கைப்பற்ற முடியாதென்றுகிலும் தீர்மானிக்க வேண்டும்.



## தமிழ் நாடு

தஞ்சை ஜில்லா போர்டார் வெள்ளக்கஷ்ட நிவாரண நிதிக்கு ஐயாயிரம் ரூபா உதவியிருக்கின்றனர்.

* * *

வெள்ளத்தினல் கஷ்டமடைந்தவர்களுக்கு உதவி செய்யும்பொருட்டு காந்தியடிகள் ஒன்பதினுயிரம் ரூபாய் பெறுமான துணிகளை ஸ்ரீமான் ச. இராஜகோபாலாச்சாரியாருக்கு அனுப்பியிருக்கிறார்.

* * *

வெள்ளக் கமிஷனரான ஸ்ரீமான் மாக்மைகேல், வெள்ளக்கஷ்ட நிவாரணத்திற்காகச் சுமார் ஒருகோடி ரூபாய் செலவிட வேண்டுமென்று அரசாங்கத்தாருக்குத் திட்டம் அனுப்பி யிருப்பதாகத் தெரிகிறது.

* * *

சென்னைக் கவர்னரான லார்ட் கோஷன், தமது பரிவாரங்களுடன் வெள்ளத்திஞல் சேதமடைந்த திரிசிராப்பள்ளி, தஞ்சாவூர் முதலிய ஜில்லாக்களில் சுற்றுப்பிரயாணம் செய்தார். ஆங்காங்கு குடிகளின் குறைகளை அநுதாபத்துடன் விசாரித்து வேண்டுவன செய்வதாகக் கூறினரென்று தெரிகிறது.

* * *

பஞ்சாப் மாகாணத்திலுள்ள மாண்ட்கோமரி என்ற ஊருக்குத் தெற்கேயுள்ள ஓரிடத்தில் வேகமாகச் சென்றுகொண்டிருந்த இரண்டு ரயில்வண்டிகள் சென்ற வெள்ளிக்கிழமை இரவு ஒரு மணிக்கு மோதிக்கொண்டன. இதன் பயனுக இறந்தவர் இதுவரை 107 பேர் என்று கணக்கிடப்பட்டிருக்கிறது.

* * *

நிகழும் ரத்தாக்ஷி௵ ஆவணி௴ உக-௩௦-௳ (13, 14-9-24) சனிக்கிழமை ஞாயிற்றுக்கிழமைகளில் காரைக்குடி இந்துமதாபிமான சங்கத்தின் ஏழாவதாண்டு நிறைவுவிழா தூத்துக்குடி ஸ்ரீமான் வ. உ. சிதம்பரம் பிள்ளையவர்கள் தலைமையில் நடைபெறும். அவ்வமயம் பல அறிஞர்களின் உபந்யாசமும் நடைபெறும்.

* * *

மேலச்சிவபுரி சன்மார்க்கசபை கஅ-வது ஆண்டு நிறைவு விழா நிகழும் இரக்தாக்ஷி-௵ ஆவணி-௴ உ௨, உ௩ (1924 செப்டம்பர்-௴ 6, 7) தேதிகளில் தஞ்சைக் கருந்திட்டைக்குடி வக்கீலும் கரந்தைத் தமிழ்ச்சங்கத்துத் தலைவரும் ஆகிய திருவாளர் த. வே. உமாமகேசுவரம் பிள்ளையவர்கள் B.A., B.L., தலைமையில் நடைபெறும்.

* * *

1924-௵ செப்டம்பர்௴ 14,15 தேதிகளில் சோழவந்தானில் நிலக்கோட்டை தாலூகா 2-வது தேசிய மஹாநாடு சேலம், ஸ்ரீமான் ச. ராஜகோபாலாச்சாரியார் அவர்களின் தலைமையின்கீழ் நடைபெறுமாதலால் கிராமசபை காரியதரிசிகள் பிரதிநிதிகளை முன்னுடியே தெரிந்தெடுத்தனுப்பும்படி கேட்டுக்கொள்வதாகக் காரியதரிசி அறிவிக்கிறார்.

* * *

மதுரை சிங்காரத்தோப்பிலிருந்த பழக்கடை வியாபாரியான சுந்தரராஜலு நாயுடு என்ற ஒருவர் சென்ற 27-ந்தேதி இரவு தெற்கு மாசி வீதியில் கொலை செய்யப்பட்டாரென்றும் இது சம்பந்தமாக காங்கிரஸ் ஊழியரும் நாகபுரி சத்தியாக்கிரகியுமான ஸ்ரீமான் நடராஜபிள்ளை என்பவரும் அவருடைய தகப்பனரும் கைதி செய்யப்படிருக்கிறார்கள் என்றும் ஒரு செய்தி கூறுகிறது.

* * *

காலஞ்சென்ற திருவாங்கூர் மன்னருக்குப் பிறகு அரியணை ஏறவேண்டியவர் இப்பொழுது இளைஞராயிருக்கிறராதலின் இவருக்குப் பதில், காலஞ்சென்ற மகாராஜாவின் சகோதரி புத்திரியான சேது லட்சுமிபாய் அவர்கள் ரீஜண்டாக இருந்து ஆண்டுவருகிறார். ரீஜண்ட் ராணிக்கு மஹாராணி பட்டம் வழங்கப்பட்டது. இது சம்பந்தமான சடங்குகள் யாவும் சென்ற திங்கட்கிழமை திருவனந்தபுரத்தில் விமரிசையாக நடைபெற்றன.

* * *

நாளது ஜூன்௴ 23-ந் தேதி வித்தியா அபிவிருத்தி சங்கம் என்ற பெயரிய சங்கம் பர்மாவிலுள்ள தன்னுப்பில் ஸ்தாபிக்கப்பட்டது. இப்பொழுது 64 அங்கத்தினர்கள் சேர்ந்திருக்கின்றனர். நகர வைசியர்கள் பலருஞ் சேர்ந்திருக்கின்றனர். இச்சங்கத்தின் நோக்கம், இலவச புஸ்தகசாலை, இலவச பாடசாலை முதலியன ஸ்தாபித்தலும் மக்கள் தம் உரிமையை ஸ்தாபிக்கும் வழியில் தக்கவற்றைச் செய்தலுமாம் என்ற காரியதரிசி தெரிவிக்கிறார்.

* * *

பெல்லாரியைச் சேர்ந்த சுமார் ஐந்நூறு ஏழைகள் அஸ்ஸாம் தேயிலைத் தோட்டத்தில் நல்ல கூலியுடன் வேலை கிடைக்குமென்று சிலரால் தூண்டப்பட்டு அழைத்துச் செல்லப்பட்டதாகவும், அங்கு இவர்கள் எதிர் பார்த்த கூலி கிடைக்கவில்லையென்றும் எனவே இவர்கள், தாங்கள் வேலை செய்துகொண்டிருந்த தோட்டத்திலிருந்து வெளி வந்து விட்டதாகவும், இதன் பயனுக அதிக கஷ்டப்படுகிறார்களென்றும் இதைப்பற்றி உடனே சென்னை மாகாண வாசிகள் கவனிக்கவேண்டும் ஒரு செய்தி கூறுகிறது.

* * *

சமீபத்தில் லார்ட் கோஷன் வெள்ளப் பிரதேசங்களைப் பார்வையிட்டபோது சிலர், வெள்ளக்கஷ்ட நிவாரண வேலையில் அதிகமாக ஈடுபட்டு உழைத்துவரும் ஸ்ரீமான் சின்னையா பிள்ளைமீது ஒரு வழக்கு இருப்பதாகக் கவர்னரிடத்தில் தெரிவித்ததாகவும், இச்சமயத்தில் இத்தகைய வழக்குகளைத் தொடராமலிருப்பது நல்லதென்று கவர்னர் தெரிவித்ததாகவும் இதன் பயனுக ஸ்ரீமான் சின்னையா பிள்ளை மீது தொடரப்பட்டிருந்த வழக்கு வாபீஸ் வாங்கிக் கொள்ளப்படுமென்று வதந்திகள் உலவுவதாகவும் ஒரு செய்தி கூறுகிறது.

* * *

தமிழ்நாடு காங்கிரஸ் கத்தர்போர்டு ஆபீஸ் மானேஜராயிருந்து வந்த ஸ்ரீமான் நா. ராமஸ்வாமி ஐயங்கார், திருச்சி, காங்கிரஸ் காதி வஸ்திராலயத்திற்கு மாற்றம் செய்யப்பட்டபடியால், அவருக்கு திருப்பூர் தமிழ்நாடு காங்கிரஸ் காதி வஸ்திராலயம் குமாஸ்தாக்களால் கத்தர்போர்டு ஆபீஸில், ஒரு பிரிவு உபசாரப் பத்திரம் வாசித்துக் கொடுக்கப்பட்டது. ஐயா 30-8-24 இரவு மேட்டுபாளையம் மெயிலில் திருச்சிக்கு புறப்பட்டுவிட்டார். மாலை 4-மணிக்கு ஐயாவின் பிரிவு உபசாரத்திற்காக ஒரு தேக்கச்சேரி நடைபெற்றது என்று ஒரு நிருபர் தெரிவிக்கிறார்.

* * *

29-8-24, வெள்ளிக்கிழமை மாலை 5-மணிக்குச் சென்னை ஜார்ஜ்டவுன் தமரப்பமுதலி தெருமருத்துவ தலசங்கக் காரியாலயத்தில் சங்கத் தலைவர் பண்டித எஸ். எஸ். ஆனந்தம் அவர்களின் அவைத்தலைமையில் ஒரு கூட்டம் கூடி வெள்ளக்கஷ்ட நிவர்த்திக்காகச் சங்கத்தார் ரூபா 50 கொடுக்கவேண்டுமென்றும், நமது நாட்டுமருத்து வச்சிகளுக்கு, பிள்ளை பெறுபார்த்தல், குழந்தைகளை வளர்த்துக் காத்தல், வைத்தியம் முதலியவைகளைக் கற்பிக்கவேண்டியதைப்பற்றி விரைவில் ஒரு கூட்டம் கூட வேண்டுமென்றும் தீர்மானங்கள் செய்யப்பட்டன என்று ஒரு நிருபர் தெரிவிக்கிறார்.

* * *

இரக்தாட்சி ஆண்டு ஆவணித் திங்கள், ௮ (24-8-1924) ஆம் நாள் ஞாயிற்றுக்கிழமை பிற்பகல் உா நாழிகை (2-மணி)க்கு திருக்கற்குடித்திருமலை சபாநாயகர் முன் மண்டபத்தில் பஞ்சாட்சரபுரம் உயர் திரு வாலையானந்த சுவாமிகள் அவர்களின் அவைத்தலைமையில், திருக்கற்குடிச் சிவனடியார் திருக்கூட்டத்தின் கு, க, எ-ம் ஆண்டுவிழா நடைபெற்றது. அப்பொழுது நிறைவேற்றப்பட்ட தீர்மானங்களில் முக்கியமானது வருமாறு :—

சமண சமயத்தில் புகுந்திருந்த திருநாவுக்கரசு சுவாமிகளை இறைவன் திருவருள்பெற்ற திலகவதியம்மையார் திருத்து ஆற்றிய முறையானே விரைந்து சைவராக்கினர்கள் என்னும் உண்மையையுணர்ந்து, சுவாமிகளை நமக்கு சமயகுரவராகப் போற்றும் பேறுடைய சைவர்களாகிய நாம், சைவசமய உண்மைகளை அறியாது பிறமதத்தில் புகுந்து துன்புறும் நம் தமிழ்மக்கள் சைவசமயக்கொள்கைகளைப் பின்பற்ற விரும்பின் அவர்கள் விரைந்து எளிதில் நம் சமயத்தில் சேர்தற்கு இடந்தரல் வேண்டுமென்ற இப்பெருங்குழுவினர் சைவத் தலைவர்களையும். சைவ நன்மக்களையும் கேட்டுக்கொள்ளுகிறார்கள்.

### சிவோபநிஷத் உபந்யாசம்

நிகழும் ரக்தாக்ஷி௵ ஆவணி௴ 23௳ (7-9-24) ஆதிவாரம் தொடங்கி, ஆதிவாரந்தோறும் காலை 8-மணி முதல் 9-மணி வரையில், சென்னை தங்கசாலைவீதியில் தொண்டைமண்டலம் பாடசாலைக்கு எதிரில் உள்ள விநாயகர் ஆலயத்தினுள்ளிருக்கும் சபா மண்டபத்தில், அடையாறு புத்தகசாலை (Adyar Library) சமஸ்கிருத பண்டிதர் பிரம்மஸ்ரீ யன். இராமநாத சாஸ்திரியார் அவர்கள் சிவோபநிஷத் உபந்யாசம் செய்வார்கள். வைதிகசசெல்வர்கள் வந்து சிரவணஞ் செய்து இன்புறவார்களாக என்று காரியதரிசிகள் தெரிவிக்கிறார்கள்.

## வைக்கம் சத்தியாக்கிரகம்

வைக்கம் சத்தியாக்கிரகம் நடைபெற்று வருகிறது. திருவாங்கூரில் புதிய ஆட்சி ஏற்பட்ட தன் பயனுக்ச் சிறையிலிருந்த ஸ்ரீமான்கள் இராமசாமி நாயக்கர், ஜார்ஜ் ஜோசப், டி. கே. மாதவன் முதலிய பலர் உள்பட சத்தியாக்கிரகிகள் அனைவரும் விடுதலை செய்யப்பட்டனர். ஸ்ரீமான் இராமசாமி நாயக்கரும் ஸ்ரீமான் குமார் என்பவரும் சேர்ந்து, சிறையிலிருந்து வெளிவந்ததும் ஓர் அறிக்கை வெளியிட்டிருக்கின்றனர். அதில் தங்களை இப்பொழுது விடுதலை செய்ததானது, அரசாங்கத்தார் இனி பாதைகள் முதலிய எல்லாவற்றிலும் எவ்லாச்சாதியாரையும் போக்குவரவுக்கு விடுவார்களென் பதைக் குறிக்கிறதென்று தாங்கள் நம்புவதாகவும் அங்ஙனமின்றி. வேறு விதமாக இருந்தால், வைக்கம் சத்தியாக்கிரகம் நடைபெறு மென்றும் குறிப்பிட்டிருக்கிறார்கள்.

ஸ்ரீமான் டி. ஆர். கிருஷ்ணசாமி ஐயருடைய மனைவியான ஸ்ரீமதி ஈசுவரி அம்மாள் சென்ற சனிக்கிழமை காலை ஸ்ரீமான் குமாரி பிள்ளையென்ற ஒரு ஜாதி ஹிந்து சத்தியாக்கிரகியுடன்வைக்கம் சோவிலுக்குள் சென்றார். சிறிதுதூரம் சென்றதும், கோயிலதிகாரிகள் அவரைத்தடுத்து கடுமையான மொழிகளை உபயோகித்தார்கள். உடனே அம்மாதரார் திரும்பிவந்து விட்டார். ஸ்ரீமான் குமாரி பிள்ளை என்ற சத்தியாக்கிரகியோ, தமக்கு அக்கோயிலுக்குள் செல்ல உரிமையுண்டென்ற தமது பாத்தியதையை வற்புறுத்தினர். ஆனல் கோயிலதிகாரிகள் கத்தர் தரித்தவர்களையும், தீண்டாதவர்களோடு உண்டவர்களையும் உள்ளே விடமுடியாதென்று மறுத்து அவரைத் தள்ளினர்கள். அந்தச் சத்தியாக்கிரகி உடனே கீழே உட்கார்ந்துவிட்டார். பிறகு இரண்டு கான்ஸ்டேபில்கள் உள்பட பலர் அவரைத் தூக்கி வெளியே கொண்டு வந்துவிட்டார்கள். இதன் பயனுக அவருக்குச் சில இடங்களில் காயம் ஏற்பட்டிருப்பதாகத் தெரிகிறது.

வைக்கம் சத்தியாக்கிரக ஆசிரமத்திலிருந்து நூல் அனுப்பப்பட்டதைப் பெற்றுக்கொண்டு மகாத்மாகாந்தி பின்வரும் பதிலை எழுதியிருக்கிறார் :— " உங்களுடைய முயற்சிக்கு ஆண்டவன் துணை செய்வாராக. இறக்கும் வரை உங்களுடைய முயற்சியைக் கைவிடாதிருப்பீர்களாக "

சம்பத்தில் கான்பூரில் நடைபெற்ற ஹிந்து முஸ்லிம் கச்சரவின் பயனுக எழு ஹிந்துக்களும் பதின்மூன்று முஸ்லிம்களும் கைதி செய்யப்பட்டார்களென்றும் இவர்கள் இது காலை ஜாமினில் விடுதலை செய்யப்பட்டிருக்கிறார்கள் என்றும் ஒரு செய்தி கூறுகிறது.

* * *

இந்தியா சட்டசபையில், எற்கனவே பள்ள தேசியக் கட்சி, சுயராஜ்யக் கட்சி ஆகிய கட்சிகள் தவிர இப்பொழுது 'தனிக்கட்சி' என்றபெயருடன் ஒருகட்சி தோன்றியிருக்கிறது. இதற்கு பண்டித மதன மோகன மாளவியாவேனும் ஸ்ரீமான் ஜின்னுவேனும் தலைவராயிருப்பாரென்றும் சட்ட வரம்புக்குட்பட்ட முட்டுக்கட்டைகளைப் போடுவதும் இக்கட்சியின் நோக்கங்களில் ஒன்றுயிருக்கு மென்றும் தெரிகின்றன.

* * *

சென்ற புதன்கிழமை சிம்லாவில் கூடிய இராஜ்ய சபையில் ஸ்ரீமான் சர்மா, சமீபத்தில் இந்தியாவுக்குத் திரும்பி வந்த கேனியா குடியேற்ற நாட்டுக் கமிட்டியார் நல்ல வேலை செய்திருக்கின்றனர் என்றும் அவருடைய அரிய ஊழியத்தை இந்தியா அரசாங்கத்தார் பெரிதும் பாராட்டுவதாகவும் தெரிவித்தார். அதே சபையில், சாவதேச சங்கத்திற்கு அனுப்பப்படும் பிரதிநிதிக் கூட்டத்திற்கு இந்தியர் ஒருவரை என் தலைவராகத் தெரிந்தெடுத்தனுப்பக் கூடாதென்று கேட்கப்பட்ட கேள்விக்கு இந்தியா மந்திரியால் லார்ட் ஹார்டிஞ்ச், இவ்வருஷத்துப் பிரதிநிதிக் கூட்டத்திற்குத் தலைவராகத் தெடுக்கப்பட்டார் என்று தெரிவிக்கப்பட்டது. இராஜ்ய சபை மீண்டும் அடுத்ததிங்கட்கிழமை கூடும்.



## தாய் நாடு

சீர்திருத்த விசாரணைக் கமிட்டி முன்னர் ஸர் பிரடெரிக் காண்ட்லெட், ஸ்ரீமான்கள் என். எம். ஜோஷி, தால்வி இவர்கள் சாட்சியம் கொடுத்தார்கள்.

* * *

'பம்பாய் கிரானிகல்' பத்திரிகையின் ஆசிரியராயிருந்த ஸ்ரீமான் மார்மடியூக்பிக்தால் குர்-ஆனை இங்கிலீஷில் மொழி பெயர்த்துக் கொண்டிருக்கிறார் என்று சொல்லப்படுகிறது.

* * *

ஆமதாபாத்திலுள்ள புதிய நகரபரிபாலன சபை மண்டபத்திற்கு காந்தி மண்டபம் என்று பெயரிட வேண்டுமென்று நகரசபை அங்கத்தினர், தலைவரைக் கேட்டுக்கொண்டிருக்கின்றனர்.

* * *

இந்தியா சட்டசபையும் சென்ற புதன் கிழமைகூடியது. சில மசோதாக்கள் கொண்டு வரப்பட்டன. மீண்டும் எட்டாந் தேதி கூடும். அப்பொழுது லீ கமிஷன் சிபார்சுகளைப் பற்றி ஆலோசிக்கப்படும்.

* * *

இங்கிலாந்துக்குச்சென்று திரும்பியபெசண்டம்மையார் சென்ற திங்கட்கிழமை சென்னை வந்து சேர்ந்தார். இந்தியாவிலுள்ள எல்லாக் கட்சிகளையும் ஒற்றுமைப்படுத்த அவர் முயற்சி செய்வாரென்று தெரிகிறது.

* * *

வங்காள மாகாண காங்கிரஸ் கமிட்டியார் பிரிட்டிஷ் சாமான்களை - முக்கியமாக பிரிட்டிஷ் துணிகளை - பகிஷ்கரிக்க வேண்டுமென்றும், வங்காளத்திலுள்ள அந்நியநாட்டுத் துணிக்கடைகளை மறியல் செய்யவேண்டு மென்றும் தீர்மானித்திருக்கின்றனர். இது சம்பந்தமாக ஆங்காங்கு கூட்டங்கள் கூட்டி தீவிரமான பிரசாரம் செய்யப்படுகின்றது.

* * *

வங்காள ஒத்துழையாச் சங்கத்தார் பீடன் ஸ்கொயரில் ஐந்தாவது முறை இராட்டினக் காட்சியை நடத்தினர். இதில் 126 பேர் கலந்து கொண்டனர். ஒவ்வொருவரும் ஒரு பாய்மீது அமர்ந்து, தங்களுடைய நூற்குந் திறமையைக் காட்டினர். இது தவிர, காதி பிரதிஷ்டான சபையார், கதர் துணிகளில் பலதினுசுகளைக் கண்காட்சியாகக் காட்டினர். பலர் அவைகளை வாங்கினர். ஒரு படக்காட்சியுடன் இது முடிவுற்றது.

* * *

வங்காள மந்திரிகளாகிய ஸ்ரீமான் பஸ்லுல் ஹக்கும் ஸ்ரீமான் கஸ்னுவியும் செப்டம்பர் மாதம் முதல் தேதி முதல் தங்கள் பதவிகளை இராஜிநாமா செய்து விட்டார்கள். மாற்றப்பட்ட இலாகாக்களை கவர்னர் தம் நிருவாகத்தில் எடுத்துக்கொண்டு விட்டார். ஸ்ரீமான் பஸ்லுல்ஹக் கூடிய விரைவில் இங்கிலாந்துக்குச் செல்வாரென்றும், முகம்மதியர்களுக்குத் தகுந்த பிரதிநிதித்தவம் கொடாத எந்தச் சீர்திருத்தமும் இப்பொழுது வேண்டியதில்லையென்று சிலர் அபிப்பிராயப்படுகிறாரென்றும் சொல்லப்படுகின்றன.

* * *

சிதிபதிகார்டி தீர்ப்பளித்த விஷயமாக இந்தியா மந்திரி வெளியிட்டிருந்த அறிக்கையை அநுசரித்து இந்தியா அரசாங்கத்தாரும் இப்பொழுது ஓர் அறிக்கையை வெளியிட்டிருக்கின்றனர். இது சம்பந்தமாக அதிக வாதம் செய்யப்படாமலிருப்பது நல்லதென்றுபிரதம மந்திரி காமன்ஸ் சபையில் கூறியதைத் தாம் ஆதரிப்பதாகவும், இந்தியா மந்திரி அறிக்கையில் கூறப்பட்டுள்ளதைத் தாங்கள் ஆதரிப்பதாயும், இது சம்பந்தமாக இதற்கு முன் கூறப்பட்டுள்ள விதிகளை எல்லா சிவில் இராணுவ உத்தியோகஸ்தர்களும் கவனிக்க வேண்டு மென்றும் இவ்வறிக்கையில் காணப்பட்டிருக்கின்றன.

* * *

குல்பர்க்கா கலவரங்களைப்பற்றி நைஜாம் ஓர் அறிக்கை வெளியிட்டிருக்கிறார் அதில் இக்கலவரங்களைப்பற்றி விசாரிக்க நியமிக்கப்பட்டிருக்கும் கமிஷனில் கலவரம் நடந்த இடத்திலேயே இருந்த ஜில்லா நீதிபதி நியமிக்கப்பட்டிருக்கிறாரென்றும் அது தவறென்றும் இப்பொழுது வேறோர் உயர்தர நீதிபதி நியமிக்கப்பட்டிருக்கிறாரென்றும், இக்கலவரம் நடைபெற்ற காலத்தில் போலீசார் தங்கடமையை எவ்வளவு தூரம் நிறைவேற்றினர்கள் என்பதைக் கமிஷனர் விசாரிக்க வேண்டுமென்றும், இக்குழப்பத்திற்கு ஏதோ அடிப்படையான காரணம் இருக்கவேண்டு மென்றும், போலீசார் தங்கடமையைச் சரியாகச் செய்யவில்லை யென்ற எண்ணம் தமக்கு இருப்பதாகவும், போலீஸ் உத்தியோகஸ்தர்கள் தங்கள் தலைமை ஸ்தானத்தில் இல்லாமற் போனதே இக்குழப்பத்திற்குக் காரணம் என்றும், இனி இத்தகைய குழப்பங்களை இராணுவ உதவியைக் கொண்டு முளையிலேயே கிள்ளி விடத் தீர்மானித்திருப்பதாயும், படைகளை ஆயிரத்தைந் நூறிலிருந்து இரண்டாயிரத்துக்கு அதிகப்படுத்த வேண்டு மென்று உத்தரவிவேதாயும் கூறப்பட்டிருக்கின்றன.

நாமார்க்குங் குடியல்லோம் நமனை யஞ்சோம் நரகத்திலிடர்ப்படோம் நடலையில்லோம், ஏமாப்போம் பிணியறியோம் பணிவோமல்லோம் இன்பமே யெந்நாளுந் துன்பமில்லை, தாமார்க்குங் குடியல்லாத் தன்மையான சங்கரனற் சங்கவெண் குழையோர் காதிற், கோமாற்கே நாமென்றும் மீளாவாளாய்க் கொய்ம்மலர்ச்சே வடியிணையே குறுகினோமே.—(அப்பர்.)



சென்னை 1924ஞு செப்டம்பர்மீ 5உ

## எழுச்சியும் வீழ்ச்சியும்

ஒரு தேசத்தில் எழுச்சி உண்டாதல் அரிது. அரிதாயெழும் எழுச்சியை வீழ்த்துவது அறச்செயலாகாது. எழுச்சியை வீழ்த்த மாற்றார் முயல்வது இயல்பு. அம்மாற்றாரும் அறநெறி பிறழ்ந்து நல்லெழுச்சியை ஒடுக்குவாராயின் அன்னார் வினைபின்னை அவரைப் பெருந்து அவர்க்கே கேடுவிளைப்பதாகும். இஃது இயற்கை நியதியின் முறை. மாற்றாரல்லாத பிறர் (தேசத்தார்) பொறாமை காரணமாகவோ வேறு எக்காரணம் பற்றியோ எழுச்சிக்கு இடர் விளைப்பாராயின் அவர் வினை அவர் வாழுந்தேசத்தையன்றோ வருத்தும்?

நமது நாட்டின் உரிமை குறித்து கிளம்பிய எழுச்சிகள் பல. அவ்வெழுச்சிகளுள் தலையாயது காந்தியடிகள்கண்ட ஒத்துழையா எழுச்சியேயாகும். அவ்வெழுச்சிக்கு முன்னர்த் தோன்றிய எழுச்சிகளெல்லாம் இப்பெருமுழுச்சிக்குத் தோற்றுவாயாக நின்றன என்னலாம். சுயராஜ்யத்துக்கு ஒழுங்குபட்ட திட்டத்தைக்கொண்ட எழுச்சி ஒத்துழையா எழுச்சி என்பது எவரும் ஒப்பமுடிந்த உண்மை. காலநிலை, தேசநிலை, அவ்வவர் நிலை ஆகிய மூன்றையுங் கருதியே காந்தியடிகள் அவ்வறவொழுக்க எழுச்சியைத் தோற்றுவித்தார். நாட்டின் உரிமைக்குத் தடையாக உள்ள முரண்களையெல்லாம் களையும் ஆற்றலன்றோ காந்தியடிகளின் தெய்விக எழுச்சி பெற்றிருக்கிறது? அவ்வெழுச்சியை வீழ்த்த முயலலாமோ?

காந்தியடிகள் தெய்விக இயக்கத்தை ஒடுக்க முதன்முதல் அதிகாரவர்க்கத்தார் முயன்றனர். அவ்வறக் கிளர்ச்சியின் நுட்பந் தெரிந்து, அதை அவர் அரசியல்கிளர்ச்சியெனக்கொண்டு அதை ஒடுக்க அவர் தலைப்பட்டனர். அஃது அறச்செயலன்று. அதிகாரவர்க்கத்தார் தமது கொடுமை குன்றுமெனக் கருதி அவ்வியக்கத்தை அடக்கப் பல முறைகளைக் கையாண்டனர். அது மாற்றார் செயல். அது குறித்து நாம் வருந்துகின்றோமில்லை. அதிகார வர்க்கத்தார் ஒத்துழையாமையைத் தலைக்க, அப்போர் முனையில் நின்ற வீரர் பலரைச் சிறைப்படுத்திச் சமயத்தில் தலைவரையுஞ் சிறைப்படுத்தினர். தலைவர் சிறைப்பட்டது ஒத்துழையாக் கிளர்ச்சியின் பேறென்றே கூறலாம். அப்பேற்றைப் பயன் படுத்திக்கொள்ளாத் தேசத்தின் நல்வினை முந்தவில்லை.

காந்தியடிகள் சிறைக் கோட்டம் நண்ண, நாட்டுணர்ச்சி நாட்டவர் உள்ளத்தில் கோயில்கொள்ள, சுயராஜ்ய மணங்கமழ, பாரதமாதா புன்முறுவலரும்ப, அவள் கொலுவமரும் வேளையில் தேயத்தார்க்குள் பிளவு ஏற்பட்டது. பிளவுக்குக் காரணம் பொறாமையோ தேசப்பற்றோ எதுவோ—அதை நாம் ஈண்டுக் கூறவல்லேமல்லேம். உற்ற பிளவையே ஈண்டுக் குறிப்பிடுகிறேம். அப்பிளவு அதிகாரவர்க்கத்துக்கு ஆக்கமளித்தது. சுயராஜ்யக்கட்சி யென்றொரு கட்சி தோன்றி ஒத்துழையாமைக்கு உயிர் நாடியாக உள்ள சட்டசபை விலக்கை மாற்றி, அதன்கண் நுழைய ஊக்கங் கொண்டமையான், தேசத்தில் பிளவு ஏற்பட்டது. நிகழ்ந்த பிரிவு வலுத்து வரும் வேளையில் காந்தியடிகளை அதிகாரவர்க்கத்தினர் விடுத்தனர். அவர் எந்நோக்கங்கொண்டு அடிகளை விடுத்தாரென்று உறுதியாக ஒன்றுங் கூற இயலவில்லை. காலநிலையை யுன்னி ஆய்ந்துழி ஓர் ஊகம் உதயமாகிறது. சுயராஜ்யக் கட்சியார் சட்டசபைகளைப் பற்றி ஆரவாரஞ்செய்து தேச நோக்கத்தைத் தம்பால் ஈர்த்துள்ள வேளையில், காந்தியடிகளை விடுதலை செய்தால், அவர் சட்டசபை நுழைவை மறுப்பாராயின், அவர் சொல் தேசத்தின் செவிக்கேறுது, அவரியக்கம் இறந்துபடுமென்பது அதிகாரவர்க்கத்தார் நோக்கமாயிருக்கலாமென்று ஊகஞ்செய்யலாமன்றோ? காந்தியடிகள் வெளிப்போந்து சட்டசபை நுழைவிற்கிணங்கினரோ வெனில், இணங்கவில்லை. அவர் தமது திட்டத்திலேயே உறுதி கொண்டுள்ளார். சுயராஜ்யக் கட்சியார் காந்தியடிகள் ஆணைவழி நிற்க மறுத்தமையான், ஒத்துழையா எழுச்சி வீழ்ச்சியுற்றதென்று அறிஞர் எவருங் கூறுவர். எனவே அதிகாரவர்க்கத்தார் நோக்கம் ஒருவாறு நிறைவேறிற்று. அதிகாரவர்க்கத்தார் மாற்றார். அவர் கடனை யவர் ஆற்றினர். அது குறித்து நாம் கவலையுறுகின்றேமில்லை. ஆனால் அவர் ஒரு தெய்விகக் கிளர்ச்சியை ஒடுக்கக் கொண்ட மறமுறைகள் பின்னை அவர்க்குத் தம் பயனை விளைவிக்கும்.

இனி சுயராஜ்யக் கட்சியார் ஒத்துழையா எழுச்சியை எவ்வாறு படிப்படியாகக் குலைத்து வருகிறாரென்பதைச் சிறிது ஆராய்வோம். காந்தியடிகள் கோலிய முறைகள் இரண்டு. ஒன்று பகிஷ்கார முறை; மற்றொன்று நிர்மாண முறை. பகிஷ்காரத்துக்கு உயிராக விருப்பது சட்டசபை பகிஷ்காரம். அஃதொழிந்தால் ஏனைய இரண்டும் இயல்பாகவே மறைந்துபோம். சுயராஜ்யக் கட்சியார் சட்டசபை பகிஷ்காரத்தை வீழ்த்தினர்; அதனால் ஏனைய இரண்டும் இருந்தவிடந் தெரியாதொழிந்தன. சுயராஜ்யக் கட்சியார் பகிஷ்கார முறையை அறவே களைந்தனர். அன்னார் நிர்மாண முறையை ஆதரித்து வருவதாகக் கூறிக்கொண்டு வந்தார். ஆனால் செயலில் ஒன்றும் நிகழ்த்தவில்லை. அவர்மீது குற்றஞ் சுமத்துகின்றோமில்லை. அவர் உழைப்பைச் சட்டசபை இழுத்துவிடுகிறது. அவர் என்செய்வர் பாவம்!

நிர்மாண முறையில் ஹிந்து முஸ்லிம் ஒற்றுமையும் தீண்டாமையும் கதரும் இன்றியமையாதன. ஹிந்து முஸ்லிம் ஒற்றுமைக்காகச் சுயராஜ்யக் கட்சியார் என்ன செய்தனர்? செய்கின்றனர்? காந்தியடிகள் உழைப்பால் பரிணமித்த ஹிந்துமுஸ்லிம் ஒற்றுமை சுயராஜ்யக் கட்சியின் தோற்றத்துக்குப் பின்னையே குலைந்து வருகிறது. வட இந்தியாவில் ரூபாது ஹிந்துமுஸ்லிம் ஒற்றுமைக்குலைவே நிகழ்ந்து வருகிறது. தீண்டாமை விலக்கலுக்குச் சிறப்பாகச் சுயராஜ்யக் கட்சிக்காரர் என்ன செய்திருக்கிறார்? சட்டசபைப் பிரவேசத்துக்குச் சுயராஜ்யக் கட்சியார் செலுத்திய ஊக்கமும், மேற்கொண்ட உழைப்பும், செலவழித்த பணமும் தீண்டாமை விலக்குக்குப் பயன்பட்டிருப்பின், நாட்டில் தீண்டாமை நிலவுமா? கதரைப்பற்றிச் சுயராஜ்யக் கட்சியார் கதர் கதர் என்று வாயால் சொல்லுகிறாரன்றிச் செயலால் அதன் வளர்ச்சிக்கென அவரென்ன ஆற்றினர்? சுயராஜ்யக் கட்சித் தோற்றத்துக்கே மூல புருஷராகிய ஸ்ரீமான் கெல்கார் ஒரு விரதங் கொண்டுள்ளாராம். அவ்விரத மென்னை? "காந்தியடிகள் சட்டசபை பிரவேசத்தை ஆதரிக்கு மட்டும் நான் கதருடுத்துவதில்லை" என்னும் விரதம். பகிஷ்கார முறைகளின் உயிராகிய சட்டசபை பகிஷ்காரத்தை வீழ்த்திப் பகிஷ்கார முறைகளையே தொலைத்த வீராகிய அன்பர் கெல்கார் இப்பொழுது நிர்மாண முறைகளின் உயிராகிய கதரைத் தொலைத்து நிர்மாண முறைகளையே வீழ்த்தமுயல்கிறார்போலும்! இவர் வினை தேசத்தைச் சூழாதோ?

சட்டசபையை உடைத்தெறிந்த பின்னர் நிர்மாண வேலையிலிறங்குவோ மென்றும், சட்டமறுப்பிலிறங்குவோமென்றும் பறை சாற்றிவந்த சுயராஜ்யக் கட்சியார் இப்பொழுது என் செய்கிறார்? இரண்டு மாகாணங்களில் சட்டசபைகள் ஒடுங்கின. இரட்டையாட்சி பட்டது. இனி சுயராஜ்யக் கட்சியார் என் செயல் வேண்டும்? சுயராஜ்யக் கட்சித் தலைவராகிய தேசபந்து சித்தரஞ்சினதாஸர் இப்பொழுது என்ன கூறுகிறார்? (இதைப்பற்றி இடியேற்றிலும் எழுதியிருக்கிறோம்) சட்டமறுப்பு வேண்டாமென்கிறார்; இங்கிலாந்து செல்லவேண்டுமென்கிறார். மேலும் சீர்திருத்தம் விரும்புகிறார்; அதற்குத் திட்டங் கூறுகிறார். தேசத்தார் கவனம் இப்பொழுது எதன்மீது செல்லும்? "இரட்டையாட்சியைத் தகர்த்த தாஸர் என்ன கூறப்போகிறார்" என்று அவர் கூற்றின்மீதே செல்லும். இஃது இயல்பு. தேசபந்துதாஸர் ஹிந்துமுஸ்லிம் ஒற்றுமை நாடாது, தீண்டாமை விலக்குமுயலாது, சுயராஜ்யம் பெறவிழைவது முடவன் கொம்புத்தேனுக்கு ஆசைப்பட்டவன் கதையாக முடியும். ஹிந்துமுஸ்லிம் ஒற்றுமையும், தீண்டாமை விலக்கலுமே சுயராஜ்யமென்று காந்தியடிகள் கூறும் நுண் பொருள், இரட்டையாட்சியை வீழ்த்திய இறுமாப்பால் இப்பொழுது விளங்கா தொழியினும், நாளடைவில் விளங்கா தொழியாது. சுயராஜ்யக் கட்சியார் எவ்வாறு படிப்படியாக ஒத்துழையா எழுச்சியை வீழ்த்தி வருகிறாரென்பதை நேயர்கள் ஆய்ந்தோய்ந்து சிந்திப்பார்களாக.

காந்தியடிகள் தெய்விக இயக்கத்தால் நாட்டில் தலைகாட்டிவந்த ஒழுக்க முறைகளையாவது நமது நண்பர்கள் காத்து வருகிறார்களா? இல்லையே. காந்தியடிகள் திட்டத்தில் நம்பிக்கை யில்லாதவர்கள், தங்கள் காரியத்துக்கு அவர் திருநாமத்தை உபயோகித்தலாகாது. சுயராஜ்யக் கட்சியார் தேர்தல் காலங்களில் காந்தியடிகள் திருப்பெயரை ஆண்டுகொள்கிறார். சென்னையில் நடைபெற்றுவரும் தேர்தல் பிரசாரத்தில் காந்தியடிகள் திருநாமம்முழங்கப் படுகிறது. தேர்தலில் வெற்றி பெறுவதும் காந்தியடிகள் திருப்பெயராலேயாகும். காந்தியடிகள் திட்டத்தில் உறுதியுடையார் காந்தியடிகள் திருநாமத்தை உபயோகிக்கலாம். திட்டத்தில் உறுதியில்லாதார் - அவரை அகத்தேகுறை கூறுவோர் - தேர்தலில் வெற்றி பெறும் பொருட்டு அவர் நாமத்தையாண்டு மக்களை ஏமாற்றலாமா? இஃது அறமா? சுயராஜ்யக் கட்சிக்காரர் காந்தியடிகள் கண்ட ஒத்துழையா எழுச்சியை வீழ்த்தி வருவதோடு அவ்வெழுச்சியால் அரும்பிவரும் நல்லொழுக்க முறைகளையுங் குலைத்து வருகிறார். சுயராஜ்யக் கட்சிக்காரர் யாவர்? நமது தேயத்தாரே. அவர் அறிந்தோ அறியாமலோ ஒரு தெய்விக இயக்கத்துக்குக் கேடு சூழ்ந்து வருகிறார். அவர் தேசத்தின் பெயரால் அவ்வினை ஆற்றி வருவதாலும், அதற்கு நமது நாட்டார் துணை நின்று வருவதாலும், அவ்வினை நாட்டையே சூழ்ந்து நிற்கும். அது நல்வினையாயின் நாட்டிற்கு நலன் விளையும்; தீவினையாயின் என் விளையும்? தேசத்தின் ஊழ் எவ்வாறுளதோ? தேசத்திற்கிளம்பும் தெய்விக எழுச்சிகளெல்லாம் தேசத்தாரால் வீழ்த்தப் படுகின்றன. என் செய்வது? இதைப் பற்றி மீண்டும் எழுதுவோம்.

## இடியேறு

### உருவெளிச் சபைகள்

நமது நாட்டில் உருவெளிச் சபைகள் பல உள்ளன. நிலையாமை, மித்தை, உருவெளிமுதலிய உரைகள் அடிக்கடி நமது நாட்டில் மலிவதுண்டு. எல்லாம் உருவெளித் தோற்றமென்று சிசுவுஞ் சொல்லும். உருவெளிப் பேச்சிற் சிறந்த நம்மவர்கள் உருவெளிச் செயல்களும் நிகழ்த்த முன் வந்திருக்கிறார்கள். ஒழுங்குபட்ட சபையொன்றுமிராது. அச்சபைப் பெயரால் தந்திகள் பறக்கும்; பத்திரிகை வெளியீட்டு ஆரவாரமோ சொல்லமுடியாது. பெயரளவிலுள்ள சபைகள் எண்ணில. ஸ்தலஸ்தாபன தேர்தற்பொருட்டு நிலவுங் காங்கரஸ் சபைகளுமுண்டு. சென்ற வாரம் ஹிந்து மகாசபையின் அறிக்கையைப் பற்றி எழுதியபோது சென்னையிலிருப்பதாகச் சொல்லப்பெற்ற கிளைச் சபைகள் யாண்டுளவென்று கேட்டிருந்தோம். இப்பொழுது ஹிந்து மகாசபையைப் பற்றிச் சுவாமி சத்திய தேவர் வெளியிட்ட கருத்துகள் கிடைத்திருக்கின்றன. சுவாமி சத்திய தேவர் தற்போதுள்ள ஹிந்து சபை உருவெளித் தோற்றமென்றும், ஹிந்துக்களிடத்தில் பணமும் ஆட்களும் உண்டு என்றும், ஆனால் சபைகளை ஒழுங்குபெற நடாத்தும் ஆற்றலில்லை யென்றும், இப்போதுள்ள ஹிந்து சபை போலியென்றும், மூடர்களும் துஷ்டர்களும் அதன் சீரைக் குலைக்கிறாரென்றும், அவரால் காங்கரஸ் மாண் பழிகிறதென்றும், திறம்படத் தொண்டுசெய்ய வல்ல ஒரு சபை வேண்டுமென்றும் அறிவிக்கிறார். இத்தகை உண்மையாளரே வேண்டற்பாலர். ஆரவாரக்காரரால் ஆற்றப்படுஞ் செயல்கள் உருவெளித் தோற்றமாகவே முடியும்.

### நல்லறிவு பிறந்தது

தாரகேசுர மகந்துக்கு நல்லறிவு பிறந்தது குறித்து மகிழ்வெய்துகிறோம். தாரகேசுர மகந்தின் அடாத செயல்களையும் படிற்றொழுக்க முறைகளையுங் கண்டு கோயிலின் பொருளையும் பண்டை வழக்க ஒழுக்கங்களையுங் காக்கவேண்டி, வங்காளத்தார் சத்தியாக்கிரகப்போர் தொடங்கினர். தாரகேசுர மகந்து குருக்காபாக் மகந்தைப்போல, முதலில் அதிகாரிகள் உதவி நாடிச் சத்தியாக்கிரகிகளுக்குப் பணியவில்லை. சத்தியாக்கிரகிகள் இடையீடின்றித் தமது அறப்போரை நிகழ்த்தவே, இப்பொழுது வெற்றி விளைந்திருக்கிறது. தாரகேசுர மகந்து பணிந்து ஒருவித உடன்படிக்கைக்கு ஒருப்பட்டார். மகந்தின் உரிமைப் பொருள் தவிர ஏனைய கோயில் பொருள் முழுவதும் இனி சுயராஜ்யக்கட்சியாரால் தெரிந்தெடுக்கப்படும் சில பிரதிநிதிகளாலும், ஹிந்து மகாசபையால் தெரிந்தெடுக்கப்படும் சில பிரதிநிதிகளாலும் பாதுகாக்கப்பட வேண்டுமென்பது உடன்படிக்கையின் நிபந்தனையெனத் தெரியவருகிறது. இச்சத்தியாக்கிரகப் போரில் தலைப்பட்டுச் சிறை புகுந்து வாகை மாலை சூடிய அன்பர் அனைவரையும் வாழ்த்துகிறோம். தமிழ்நாட்டிலுள்ள மடங்களையும் கோயில்களையும் அற முறையில் காக்க எவரேனும் முன் வருவாரோ? சுயராஜ்யக் கட்சியார் கோயிலின் பொருளைத் தேர்தலுக்குப் பயன்படுத்தாதிருப்பாராக.

### அரசியலும் மதமும் மஹாத்மாவும்

தற்போது அரசியல் வேறாகவும் மதம் வேறாகவும் சிலரால் கருதப்படுகின்றன. அரசியல் இல்லறத்தார்க்கென்றும், மதம் துறவறத்தார்க்கென்றும் பிரிக்கப்படுகின்றன. இப்பிரிவு கொண்டு அரசியலில் பொய் பொறாமை முதலியவற்றைப் புகுத்துவது தருமமெனக் கொள்ளப்படுகிறது. இக்காரணத்தால் அரசியல் உலகு விலங்கின் நீர்மை எய்தி வருகிறது. இந்திய அரசியல் உலகிலும் மிருக சுபாவம் படிந்து வருவதைக் காண்கிறோம். இவ்வாறே அரசியற்றுறை வளர்ந்து வருமாயின் மக்கள் விலங்காவரென்பது நிச்சயம். மேல் நாட்டு அரசியல் கூட்டத்தார் மதத்தை விடுத்தமையால் அவர் நாடு துன்பத்தில் தோய்ந்திருக்கிறது. மத தருமம் விரவிய அரசியல் வளர்ந்தாலன்றி உலகம் வாழாது. மனிதனை விலங்கினின்றும் பிரித்திருப்பது மதமன்றோ? அத்தகைய மதத்தையா மனிதன் விடுவது? ஆகவே மதத்தை அரசியலோடு கலந்தே சேவை செய்யவேண்டுவது மக்கள் கடமை. அக்கடமை ஆற்றவே மஹாத்மாகாந்தி தோன்றியிருக்கிறார். அவர் மதத்தின் வழி அரசியல் வளரவேண்டுமென்று சொல்கிறார். பம்பாய் நகரபரிபாலன சங்கத்தார் அவர்க்கு வழங்கிய உபசாரப் பத்திரத்துக்கு அவரளித்த பதிலில் மத தரும அரசியல் உரைகள் மிளிர்கின்றன. அவைகளில் சில வருமாறு:—

ஜீவகாருண்யத் தொண்டெனச் சொல்லப்படும் எனது தொண்டைப்பற்றி நீங்கள் மிகவும் வலியுறுத்திக் கூறியிருக்கிறீர்கள். மன்பதைக்கும் மற்ற வுயிர்களுக்குஞ் செய்யப்படுந் தொண்டேசமயமென்பது. அத்தகைய சமயத்துக்கும் அரசியலுக்கும் வேற்றுமை கண்டிலேன். அரசியல் கலப்பின்றி முழு சேவை செய்ய முடியுமென்பதை யான் உணரகில்லேன். மதக்கலப்பில்லா அரசியலால் ஆபத்து உண்டென்பதையும் அதனாழில் செலுத்துமென்பதையும், அதனால் மனிதனுக்கும், தேசங்களுக்கும், பெருந் துன்பம் உண்டு என்பதையும் உறுதிப்படுத்த யான் முயன்று வருகிறேன்.

இவ்வுரைகளைப் பொதுவாக எல்லா அரசியல் வாதிகளும் சிறப்பாகச் சுயராஜ்யக்கட்சிக்காரும் கவனிப்பார்களாக.

### ஒற்றுமையுங் காந்தியடிகளும்

யாண்டும் ஒற்றுமை ஒற்றுமை என்னுங் கூச்சல் பெருகி விட்டது. காந்தியடிகள் ஒற்றுமைக்கே தாமும் முயன்று வருவதாகக் கூறுகிறார். அபிப்பிராய பேதங்களுக்கு இடமாக உள்ள ஒத்துழையா முறைகளிற் சிலவற்றைத் தாமொடுக்கிக் கொள்வதாகவும் அபிப்பிராய பேதமில்லாத கதர், தீண்டாமை, ஹிந்து முஸ்லிம் ஒற்றுமை ஆகிய மூன்றற்கும் உழைக்கப் போவதாகவுஞ்சொல்கிறார். ஆகவே காந்தியடிகள் எல்லாரும் ஒத்துக்கொள்ளக்கூடிய இடத்தைக் குறிப்பிட்டுவிட்டார். காந்தியடிகளும் டாக்டர் பெஸண்டும் பம்பாயில் ஏதோ ஒருவித ஒற்றுமை முடிவிற்கு வந்திருப்பதாகத் தெரியவருகிறது. ஒற்றுமைப்பட்ட காங்கரஸே பெல்காமில் நடைபெறுமென்று ஊகிக்கிறோம். அதற்கு மகாத்மாகாந்தியே அக்கிராசனம் வகிக்கத்தக்கவர். இவ்வேளையில் அவரும் இசைவர். அவரையே தேசத்தார் தெரிந்தெடுப்பாராக.

### பெல்காம் (வேளகம்) அக்கிராசனர்

பெல்காமில் கூடப்போகும் காங்கரஸுக்குத் தலைமை வகிப்பதில் பலதிறச் சிக்கல்கள் ஏற்பட்டிருக்கின்றன. ஏறக்குறைய எல்லா மாகாணங்களுக்கும் மஹாத்மா காந்தி அக்கிராசனம் வகிப்பதிலேயே விருப்பமுண்டென்பது முதல் முதல் கிடைத்த செய்திகளால் தெரிய வந்தது. மஹாத்மா தலைமையேற்க விரும்பாது ஸ்ரீமதி சரோஜனிக்கு அப்பேற்றை வழங்குமாறு தேசத்தாரைக் கேட்டுக்கொண்டார். மஹாத்மா தாம் மறுத்தற்குக் கூறிய காரணம் தேசத்தார் தமது திட்டத்தை நிறைவேற்றாது, தம்மாட்டு மாத்திரம் அன்பு காட்டுவதால் பயனில்லை என்பதே. அக்காரணங் கேட்ட சக்கரவர்த்தி இராஜகோபாலாச்சாரியார் தேசம் மஹாத்மா திட்டத்தில் உறுதி காட்டி அவரையே அக்கிராசனம் வகிக்க இன்னுமொரு முறை கேட்கவேண்டுமென விண்ணப்பித்துக் கொண்டார். முடிவாக மஹாத்மாவையே தெரிந்தெடுக்க வேண்டுமென்றே நாமும் தமிழ் நாட்டாரைக் கேட்டுக்கொண்டோம். இதுகாறுங் கிடைத்த தமிழ்நாட்டுப் பிரதிநிதிகள் வாக்குகளை நோக்குழித் தமிழ் நாட்டின் நோக்கம் மஹாத்மாவின் மீதே படிந்திருக்கிறது என்பது புலனாகிறது. 218 போஸ்ட் கார்ட்டுகள் தமிழ்நாட்டுக் காங்கரஸ் பிரதிநிதிகளுக்கு அனுப்பப்பட்டன. இதுகாறும் 146 வாக்குகள் கிடைத்திருப்பதாகத் தெரிய வருகிறது. அவைகளுள் மகாத்மாவுக்கு 139-ம் ஸ்ரீமதி சரோஜனிக்கு 3-ம் ஸ்ரீமான்கள் கெல்கார், பண்டித ஜவஹரிலால் நேரு, இராஜகோபாலாச்சாரியார், டாக்டர் அன்சாரி ஆகிய இவர் ஒவ்வொருவர்க்கு ஒவ்வொன்றும் கிடைத்திருக்கின்றன. இதனால் தமிழ்நாடு முடிவாக மஹாத்மாவையே தெரிந்தெடுத்திருக்கிறது என்பது வெளிப்படை. இது குறித்துத் தமிழ்நாட்டை வாழ்த்துகிறோம். மற்ற மாகாணங்களும் தமிழ்நாட்டின் அடிச்சுவட்டைப் பற்றி நடக்குமென நம்புகிறோம்.

### தமிழ்நாட்டுக் காங்கரஸ் கூட்டம்

இக்கூட்டம் ஈரோட்டில் தேசபக்தர் ஈ. வி. இராமசாமி நாயக்கர் வீட்டில் கூடிற்று. உப அக்கிராசனராகிய சக்கரவர்த்தி இராஜகோபாலாச்சாரியார் தலைமை வகித்தார். அக்கூட்டத்துக்குச் சென்னை ஸ்ரீமான் எஸ். ஸ்ரீநிவாச ஐயங்கார் முதலியோர் விஜயஞ் செய்தனர். காரியக்கூட்டத்தாரால் செப்பஞ்செய்யப்பெற்ற புது விதிகளைப்பற்றிய விவாதமே பெரிதும் நிகழ்ந்தது. தமிழ்நாட்டுக் காங்கரஸ் அங்கத்தினரின் தற்போதைய தொகை 413. அதை 120 ஆகக்குறைக்க வேண்டுமென்ற தீர்மானத்தைப் பற்றிப் பலமான விவாதம் நடந்தது. ஸ்ரீமான் ஸ்ரீநிவாச ஐயங்கார் 240 ஆகவாவது இருக்கவேண்டுமென்று ஒரு திருத்தங்கொணர்ந்தார். அதற்குச் சாதகமாகவும் பாதகமாகவும் 16 வாக்குகளெழுந்தன. முடிவில் அக்கிராசனர் வாக்குத்துணைகொண்டு மூலத்தீர்மானமே நிறைவேறிற்று. தொகைப் பெருக்காலும் சுருக்காலும் ஒன்றும் விளையப்போவதில்லை. வேண்டுவது வேலையே; அதற்கு இன்றியமையாதது ஒற்றுமையே. அதை விரும்புந் தலைவர் எவர்? மாதத்துக்கொரு முறை இரண்டாயிர கஜ நூல் நூற்றனுப்பத் தவறுபவர் காங்கரஸ் கூட்டத்தில் தமக்குள்ள பதவியையிழக்கக்கடவர் என்ற விதி, முடிவில் தண்டனைப் பகுதி நீங்கலாக நிறைவேறிற்று. தண்டனை விதி விடுபட்டதால் விதியின் உள்ளுறை சாகவில்லை. ஆதலால் எவரும் விதிக்குக் கட்டுப்பட்டு நூல் அனுப்பல் வேண்டும் அல்லது தமது பதவியினின்றும் விலகுதல் வேண்டும். இவ்விரண்டில் ஒன்றையுஞ் செய்யாதிருப்பவர் காங்கரஸ் விதியை மீறி நடப்பவரேயாவர். தமிழ்நாட்டு மகாநாடுகளில் தலைமை வகிப்போர் தமிழ்மொழி பயிற்சியுடையவராயிருத்தல் வேண்டுமென்னும் விதியே புதுக்கவேண்டுமென்று ஸ்ரீமான் ஸ்ரீநிவாச ஐயங்கார் கொண்ட விருப்பத்தை வலியுறுத்தாது போனது தமிழ்நாட்டின் துர் அதிர்ஷ்டமென்று கூறுவோம். தமிழ்த் தாய் கவலையின்னுந் தீரவில்லை. தமிழ்நாட்டுக் காங்கரஸின் தலைமைப் பீடம் திரிசிராப்பள்ளியிலேயே யிருக்கவேண்டுமெனும் விதி நிறுவப்பட்டது போற்றத்தக்கதே. இக்கூட்ட நடை முறையைப்பற்றி விவாதங்கள் சில விடங்களில் எழுகின்றன. விவாதமெற்றுக்கு? காங்கரஸில் சேராமலும் பதவி வகியாமலும் தொண்டு செய்யலாமன்றோ?

### வங்காளச் சட்டசபை

வங்காளச் சட்டசபை கும்பிக்கப்பட்டது. மாற்றப்பட்ட இலாகாக்கள் கவர்னர் பால் சரண்புகுந்தன. மந்திரியாட்சி கவர்னராட்சியாகமாறிவிட்டது. வங்காளத்தில் எழும் அபிப்பிராயங்களுக்கோ அளவில்லை. சுயராஜ்யக்கட்சியில் சேராத சிலரும் மந்திரி சம்பளமறுப்பில் கலந்து கொண்டதற்குக் காரணம் சுயராஜ்யக்கட்சிக்குச் சார்பாக நிற்கவேண்டுமென்னும் நோக்கமன்றென்றும், உள்ள மந்திரிமார்மீது அவருக்கிருந்த விருப்பமின்மையேயென்றும், கவர்னர் சட்டசபையைக் கலையாது வேறு மந்திரிகளை நியமித்திருப்பின் அவர் அரசாங்கப்பக்கஞ் சார்ந்திருக்கக்கூடுமென்றுஞ் சொல்லப்படுகின்றன. இதனால் சுயராஜ்யக்கட்சியின் உண்மை நிலை புலனாகிறது. வங்காளச் சட்டசபையின் கதியென்னாகுமென்பது எதிர்பார்க்கத்தக்கது. தேசபந்துதாஸ் இனிச் செய்யவேண்டிய வேலைகளைப்பற்றி ஒழுங்கான முறை ஒன்றையுங் குறிப்பிடுகிறாரில்லை. பொதுஜன சட்டமறுப்பு அநாவசியமென்று சொல்கிறார்; பிரிட்டிஷ் இராஜப் பிரதிநிதியும் பிரிட்டிஷ் மந்திரியும் இந்தியமந்திரியும் அமைந்த ஒருமத்திய அரசாங்கம் வேண்டுமென்றுங் கூறுகிறார். கானடா நினைவு தாஸருக்குத் தோன்றுகிறது போலும்! சித்தரஞ்சினர் பிரிட்டன் இந்தியாவிற்குச் செவி சாய்க்கவேண்டுமென்றும், அடக்குமுறையால் எதையும் ஒடுக்கமுடியாதென்றுஞ் சொல்லி, அரசாங்கத்தார் கருதுவதைப் பார்க்கிலும் மிக உரமான அராஜகக்கிளர்ச்சி வங்காளத்திலிருக்கிறதென்றும், தமது சுயராஜ்யக் கட்சியின் நோக்கம் நிறைவேறாவிடின் அமைதியின்மை ஏற்படுமென்றும் அரசாங்கத்துக்கு எச்சரிக்கை செய்கிறார். காந்தியடிகள் முறைமீது கருத்தைச் செலுத்தாது ஸ்ரீ தாஸர் வீணுரை பகர்கிறார்; விரைவில் இங்கிலாந்துக்குப் பறப்பார்போல் தோன்றுகிறது.

### இங்கிலாந்து என் செய்யும்?

சுயராஜ்யக்கட்சியார் இரண்டு மாகாணங்களில் இரட்டையாட்சியை யொடுக்கியதைக் கேட்ட இங்கிலாந்து பத்திரிகைகள் இந்தியாவுக்கு மேலே எவ்வித சீர்திருத்தமும் வழங்கக் கூடாதென்றும், அவர்க்குத் தற்போது அளிக்கப்பட்டுள்ள சீர்திருத்தத்தையே அவர் பயன்படுத்தாது அதை இடர்படுத்துகிறாரென்றும், இனி ஆட்சி முறையை அதிகாரிகள் வசமே நடத்த விடவேண்டுமென்றும் எழுதுகின்றன. பிரிட்டிஷ் பார்லிமெண்ட் என்ன செய்யும்? சுயராஜ்யகட்சியார் விரும்புகிறபடி மேலே போகுமா? இங்கிலீஷ் பத்திரிகைகள் கூறுகிறபடி கீழேயிறங்குமா? இதை ஒவ்வோர் இந்தியருங் கவனித்தல் வேண்டும். சித்தரஞ்சின தாஸர் அராஜக எச்சரிக்கை செய்கிறார். பிரிட்டிஷார் அதற்கு அஞ்சுவரோ? சுயராஜ்யக்கட்சியார் செயலால் இந்தியாவிற்கு என்ன நிகழுமோ தெரியவில்லை. காந்தியடிகள் வழியே சாலச்சிறந்தது என்று இன்னும் எமக்குத் தோன்றுகிறது. அவர் தயவின்றி அவர்வழியால் மிக எளிதில் சுயராஜ்யம் பெறலாமன்றோ?

### நாட்டியக் கச்சேரி

வெள்ளத்தினால் துன்புற்ற தென் பிரதேசங்களை கவர்னர் பார்வையிட்டு வந்தார். கவர்னர், ஆடு துறையிலிருந்து கீழ் அணைக்கட்டைப்பார்க்கச் சென்றபோது வழியில் திருப்பனந்தாள் பண்டார சந்நிதியவர்களால் உபசரிக்கப்பட்டார். இதனுடன் நின்றிருந்தால் எவரும் ஒன்றும் கூறுவதற்கில்லை. திருப்பனந்தாள் மடத்தார், கவர்னரின் விஜயத்தையொட்டி ஒரு நாட்டியக் கச்சேரி நடத்தியதாகவும், இங்கு கவர்னர் இருபது நிமிஷநேரம் தாமதித்ததாகவும் அறிகிறோம். நல்ல சமயம்! நல்ல உபசாரம்! பண்டார சந்நிதியவர்களுக்கு இந்த யோசனையை யார் கூறினரோ தெரியவில்லை. வெள்ளத்தினால் ஜனங்கள் ஆங்காங்கு துன்புற்றுக்கொண்டிருக்க அவர்களுடைய நிலைமையைக் கவனிக்கும் பொருட்டு கவர்னர் சென்றார். நூற்றுக்கணக்கான ரூபாயைச் செலவழித்து நாட்டியக் கச்சேரியை நடத்துவதற்கு இதுவோ சமயம்? ஜனங்களின் கூக்குரல் பண்டார சந்நிதியின் திருச்செவியில் விழவில்லையா? நாட்டியக் கச்சேரிமீதே அவர் நாட்டங்கொண்டார்போலும். இவருடைய செய்கையைக் கண்டிக்க நமக்குச் சரியான மொழிகள் அகப்படவில்லை.

### நட்பும் பகைமையும்

சென்ற புதன்கிழமை கோகலே மண்டபத்தில் கொண்டாடப்பெற்ற டாக்டர் பெஸண்ட் அம்மையார் ஐம்பதாண்டு சேவை விழாவில் தலைமை வகித்த ஸ்ரீமான் ஸி. பி. இராமசாமி ஐயர் பொதுஜன வாழ்வில் நட்பைப் பெறுதல் எளிதென்றும், பகைமையைப் பெறுதல் அதனிலும் மிக எளிதென்றும் பேசியதை, அவ்விடத்தில் பின்னர் பேசிய ஸ்ரீமான் சத்திய மூர்த்தி ஐயர் குறிப்பிட்டுத்தமக்கும் பகைவர் பெருகிவருகிறாரென்றும், அது குறித்துதாம் நாணமுறவில்லை யென்றுமுரைத்துள்ளார். இவ்வுரையின் பொருள் நன்கு புலனாகிறது. ஸ்ரீமான் சத்திய மூர்த்திதாம் ஏற்கப்போகும் பின்னை அரசியல் வாழ்விற்கு இப்பொழுதே கால்கோள் விழா தொடங்குகிறார் போலும்! இவ்வளவே இப்பொழுதுரைக்கக் கால தேவதை அறிவுறுத்துகிறது. பிறபின்.

### ஸ்ரீமான் ஹார்னிமான்

பம்பாய்ச் சட்டசபையில் ஸ்ரீமான் ஹார்னிமானைப்பற்றி ஒரு வாதம் எழுந்தபோது, ஸர் மாரிஸ் ஹேவார்ட் அவர்மீது பல விதமான பழிகளைச் சுமத்தினர். இதற்கு ஸ்ரீமான் ஹார்னிமான் 'பம்பாய் கிரானிகல்' பத்திரிகையில் தக்க மறுப்பெழுதி, ஸர் மாரிஸ் ஹேவார்ட் சாட்டிய குற்றங்களை நிரூபிக்கும்படி கேட்டார். இதற்குத் தகுந்த பதில் கிடைக்கவேயில்லை. சென்ற புதன்கிழமை கூடிய இந்தியா சட்டசபையில் இது சம்பந்தமாகக் கேட்கப்பட்ட ஒரு கேள்விக்கு ஸர் அலெக்ஸாண்டர் மட்டிமான், இதைப் பற்றி ஒன்றுமே தெரியாதுபோலக் கூறிவிட்டார். எந்தக் கேள்விக்கும் 'ஆம்' அல்லது 'இல்லை' என்ற விடையே இவரிடமிருந்து கிடைத்ததன்றி வேறொன்றுங் கிடைக்கவில்லை. இத்தகைய விடைகளைக் கூறியதால், தாம் மிகுந்த இராஜ தந்திரத்துடன் நடந்துகொண்டதாக ஸ்ரீமான் மட்டிமான் நினைக்கலாம். ஆனால் இவைகளினால், அரசாங்கத்திடத்திலிருக்கும் அதிருப்தி அதிகமாகிறது என்பதை அவர் அறிந்து கொள்ள வேண்டும். ஸ்ரீமான் ஹார்னிமானை இந்தியாவுக்குள் வரவிடக் கூடாதென்பது அரசாங்கத்தாருடைய அபிப்பிராயமாயிருந்தால், அதை அவர் பகிரங்கமாக வெளியிட்டு விடுதல் நலம். அதை விடுத்து என் இந்தத் தந்திர முறைகளையெல்லாம் அநுசரிக்க வேண்டும்!

### நைஜாமின் வேலை

நைஜாம் அரசருக்குப் பத்திரிகைகளைத் தம் சமஸ்தான எல்லைக்குள் வரவொட்டாதபடி தடுத்துக்கொண்டிருப்பதுதான் வேலையோ என்பதை அறிய விரும்புகிறோம். சென்றவாரம் 'சர்வெண்டு ஆப் இந்தியா' பத்திரிகை அவருடைய மறக்கருணைக்கு உட்பட்டது. இவ்வாரம் 'அமிருத பஜார் பத்திரிகையின்' மீது அவர் திருநோக்கத்தைச் செலுத்தியிருக்கிறார். உண்மையில் நைஜாம் சிறந்த இராஜ தந்திரி என்பதற்கு இதைவிட வேறு என்ன அத்தாட்சி வேண்டும்?

### உண்மையா?

லீ கமிஷன் சிபார்சுகளை அமுலுக்குக் கொண்டு வருவதற்குவேண்டிய திட்டங்களைச் சித்தப்படுத்திக் கொள்ள வேண்டுமென்றும், அவைகளை விரைவில் அமுலுக்குக் கொண்டு வரவேண்டியிருக்கும் என்றும் இந்தியா அரசாங்கத்தார் சென்னை அரசாங்கத்தாருக்கு அறிவித்திருப்பதாயும், இந்தியா சட்டசபையார், இச்சிபார்சுகளை நிராகரித்து விட்டபோதிலும், இவைகளை இந்தியா அரசாங்கத்தார் அமுலுக்குக் கொண்டுவருவர் என்றும் சொல்லப்படுகின்றன. இவைகள் உண்மையானால் நாம் ஆச்சரியப்பட வேண்டியதொன்றுமில்லை. பொதுஜன அபிப்பிராயத்திற்கு விரோதமாகக் கமிஷனை நியமித்த அரசாங்கத்தார், அக்கமிஷன் சிபார்சுகளை அமுலுக்குக்கொண்டுவருவதில் என்ன ஆச்சரியமிருக்கிறது?

### "தமிழ் மகள்"

"தமிழ் மகள்" என்னும் பெயர் வாய்ந்த இம்மாதப்பத்திரிகையின் முதலிதழ் எமது பார்வைக்கு வந்தது. "தமிழ் மகள்" என்னுந் தமிழ்ப் பெயர் கண்டு மகிழ் வெய்தினேம். "தமிழ் மகள்" தமிழ் மணங்கமழும் யாழ்ப்பாணத்தினின்றும் வெளிவருவது கண்டு உற்ற மகிழ்ச்சி கூர்ந்தது. மேலும் "தமிழ் மகள்" ஆசிரியர் ஒரு தமிழ் மகள் என்பது காண எமது உள்ளம் இன்பக்கடலில் திளைத்தது. தமிழ் தற்காலம் உற்றுள்ள நிலை பெரிதும் இரங்கத்தக்கதன்றோ? தமிழ் நாட்டில் தமிழ் மொழிவளங் கருதி நடைபெறும் பத்திரிகைகள் ஒரு சில என்றே கூறலாம். மொழி வளர்நோக்கமின்றித் தமிழ் எழுத்துக்களை மாத்திரந் தாங்கி வரும் பத்திரிகைகளால் பெரும் பயன் விளையுமோ? தமிழ் மகளின் ஆசிரியர் உரையும், ஏனையோர் உரையும் தமிழ் மொழிக்கு ஆக்கந்தேடுங் குறிக்கொண்டு நிற்கின்றன. "தமிழ் மக"ளில் மொழி மணங்கமழுங் கட்டுரைகளோடு மக்கள் வாழ்விற்குப்பயன்படும்பலதிறக்கட்டுரைகளும் இலங்குகின்றன. இத்தகைப் பத்திரிகையொன்று இக்காலில் வெளியிட முன் வந்த அதன் ஆசிரியரும், "தேசாபிமானி" ஆசிரியர் திருவாளர் மாசிலாமணிப்பிள்ளை அவர்களின் வாழக்கைத் துணை நலமுமாகிய திருமிகுமங்களாம்பாள் அவர்கட்கு எமது நன்றியறிதலைச் செலுத்துகிறேம். 'தமிழ் மக'ளைத் தமிழுலகு ஆதரிப்பதாக. பத்திரிகையின் வருட சந்தா ஐந்து ரூபா.

## காந்தியடிகளும் இராஜபக்தியும்

### நீதிஸ்தலத்தில் வாதம்

அனந்தபூர் ஜில்லா மாஜிஸ்ட்ரேட் கோர்ட்டில் ஆகஸ்ட் மாதம் 30-ந்தேதி ஒரு விநோத சம்பவம் நடைபெற்றது. குத்திதாலுகாவைச் சேர்ந்த சிந்தலசெருவு என்ற ஊரில் சென்ற பிப்ரவரி மாதம் ஒரு பெரிய கொள்ளை நடைபெற்றது. இது சம்பந்தமாக மேற்படி கோர்டில் ஒரு வழக்கு நடைபெறுகிறது. இதில் குற்றவாளிகள் முப்பத்தாறு பேர். இவரில் சின்னப்பரெட்டி என்பவரும் ஒருவர். காந்தியடிகளிடத்தில் மிகுந்த பக்தி கொண்டவர். இவர் பிப்ரவரி மாதம் பத்தாந்தேதி பெத்தவடுகூரு என்ற கிராமத்தில் மகாத்மாகாந்தி விடுதலையைக் கொண்டாடி ஓர் ஊர்வலம் நடத்தினர். இந்த ஊர்வலம் சம்பந்தமாக, மேற்படி கிராமத்து முனிசீபாகிய சதாசிவரெட்டி என்பவர் மேற்படி கோர்ட்டில் விசாரிக்கப்பட்டார். குற்றவாளிகள் தரப்பில் திவான் பகதூர் பி. கேசவப்பிள்ளை பி. சிவராவ் முதலியோர் ஆஜராயிருந்தார்கள். பிராசிகியூஷன் தரப்பில் பப்ளிக்பிராசிக்யூடர் முதலாயினோர் ஆஜராயிருந்தனர். ஸ்ரீமான் சதாசிவரெட்டியை பப்ளிக்பிராசிகியூடர் குறுக்கு விசாரணை செய்யும்போது பின் வரும் வாதம் நடைபெற்றது.

வினா:— நீங்கள் பெத்த வடுகூரின் கிராம முனிசிப் தானே.

விடை:—ஆம்.

வினா:— ஒத்துழையா இயக்கம் ஸ்ரீமான் காந்தியுடன் சம்பந்தப்பட்டதன்று? அரசாங்கத்தார் இதற்கு விரோதமாக இல்லையா?

விடை:—அரசாங்கத்தார் எது நல்லதோ அதை ஆதரிப்பர்: எது கேட்டதோ அதை மறுப்பார்.

வினா:—என்கேள்விக்கு அது விடையல்ல. ஒத்துழையா இயக்கம் அரசாங்கத்தாரால் அங்கீகரிக்கப்படவில்லை யென்பது உமக்குத் தெரியாதா?

கோர்ட்டார்:— கேள்விக்குப்பதில் கூறும். ஒத்துழையாமை என்றால் இன்னதென்று உங்களுக்குத் தெரியாதா?

ஸ்ரீகேசவப்பிள்ளை:— இந்தக்கேள்வி கேட்பதின் நோக்கமென்ன? சாட்சி முன்னரே இதற்குப்பதில் கூறியிருக்கிறார். அதனைப் பதிவு செய்து கொள்ளுங்கள்.

வினா:—என்னுடைய கேள்விக்கு அது விடையல்ல. சாட்சி, ஓர் அரசாங்க ஊழியராயிருந்து அந்த ஊர்வலத்தில் சேர்ந்திருக்கக் கூடாதென்பதை நான் நிரூபிக்கிறேன்.

ஸ்ரீகேசவப்பிள்ளை:—என்ன கொடுமையான இராஜபக்தி!

வினா:—ஒத்துழையாமை என்றால் என்ன?

ஸ்ரீகேசவப்பிள்ளை:—இங்கிலீஷ் படித்தவர்களாலே கூட இதற்குச் சரியான பொருள் கூற முடியாது. பப்ளிக் பிராசிகியூடர் இதற்கு முதலில் பொருள் கூறுவாரா! சாதாரண அறிவு படைத்த ஒரு கிராம முனிசிப்புக்கு என்ன தெரியும்?

கோர்ட்டார்:— சாட்சி, இதற்குப் பதில் கூறக்கூடுமென்று கருதுகிறேன். அரசாங்க ஊழியராயிருக்கும் அவர். தாம் செய்தது பிழையென்று உணரவேண்டும். (சாட்சியைப் பார்த்து) என்ன ஐயா! என்ன சொல்கிறீர்?

ஸ்ரீ கேசவப்பிள்ளை:— அவர் முன்னரே பதில் கூறிவிட்டார். நம்மவரில் ஒருவரும் இக்கேள்விக்குச் சரியான பதில் கூறமுடியாதென்று நான் நினைக்கிறேன். பிரிட்டிஷ் அரசாங்கத்துக்கு விரோதமாக ஒத்துழையா இயக்கம் ஏற்பட்டது என்று நான் நம்பவில்லை. அரசாங்கத்தின் கெட்ட ஆட்சிமுறையைக் கண்டிக்கவே அஃதெழுந்தது. அரசாங்க ஊழியர் என்ற முறையில், பப்ளிக்பிராசிகியூடர் தமது

இராஜ பக்தியைக் காண்பித்துக்கொள்ளவிரும்புகிறார் போலும்.!

கோர்ட்டார் :— பப்ளிக்பிராஸிகியூடர் அரசாங்க ஊழியரல்ல.

ஸ்ரீ கேசவப்பிள்ளை :— அவர் அரசாங்கத்தினின்று பணம் பெறுகிறார். ஒத்துழையாமையைப்பற்றி ஒரு கிராம முனிசிப்பை பல கஷ்டமான கேள்விகளை பப்ளிக்பிராஸிகியூடர் கேட்பதைக்குறித்து நான் வருந்துகிறேன்.

கோர்ட்டார் :— அரசாங்க ஊழியராயிருக்கும் அவர் ஊர்வலத்தில் ஏன் சேர்ந்துகொண்டார் என்று நான் கேட்கக்கூடாதென்று நீங்கள் கூறுகிறீர்களா?

ஸ்ரீ கேசவப்பிள்ளை :— கலெக்டர் என்ற தோரணையில் உங்களுடைய இலாகா மூலமாக நீங்கள் ஏதேனும் நடவடிக்கை எடுத்துக் கொள்ளலாம். இப்பொழுது நீங்கள் ஒரு நீதிபதியாகவே இருக்கிறீர்கள். இந்தச் சாட்சி கூறியதை நீங்கள் குறித்துக்கொள்வீர்களா?

வினு :— அரசாங்கத்தார் ஒத்துழையாமையை அங்கீகரிக்கவில்லை என்பது உங்களுக்குத் தெரியாதா? (இந்தக் கேள்வியை பப்ளிக் பிராஸிகியூடர் திருப்பித் திருப்பிக் கேட்டார்.)

விடை :— அரசாங்கத்தார் இந்த இயக்கத்தை அங்கீகரிக்கின்றனரா இல்லையா வென்பது எனக்குத் தெரியாது.

வினு :— வரி கட்டவேண்டாமென்றும், கள்ளுக்கடைகளுக்கு விரோதமாகவும் காந்தி பேசியிருக்கிறார் என்பது உங்களுக்குத் தெரியாதா?

விடை :— காந்தி ஒரு மகாத்மா என்றும் அவர் பொதுஜன நன்மைக்காக உழைக்கிறார் என்றும் நான் கேள்விப்பட்டிருக்கிறேன். இவைகளையெல்லாம் நாங்கள் 'ஆந்திர பத்திரிகை'யில் படிப்பது வழக்கம்.

கோர்ட்டார் :—காந்தி ஒரு யோகியாக இருக்கலாம். ஆனால் அவர் சிறைக்கு அனுப்பப்பட்டாரே.

ஸ்ரீகேசவப்பிள்ளை :—ஆ! அதே அரசாங்கத்தார் அவரை விடுதலை செய்தனரே! அவர் விடுதலையானதைக் குறித்து சந்தோஷக் கொண்டாட்டங்கள் கொண்டாடப்பட்டதோடு கூட, அவரை விடுதலை செய்ததற்காக அரசாங்கமும் பாராட்டப்பட்டதே.

வினு :—ஒத்துழையா இயக்கத்தில் அரசாங்க உத்தியோகஸ்தர்கள் சம்பந்தப்படக் கூடாதென்பது உங்களுக்குத் தெரியாதா?

விடை :—என்னைப் போன்ற அரசாங்க உத்தியோகஸ்தர்கள் ஊர் வலத்தில் கலந்துகொள்ளக்கூடா தென்று தடுக்கப்பட்டிருக்கிறார்களா வென்பது எனக்குத் தெரியாது. இது சம்பந்தமாக எனக்கு எவ்வித உத்தரவும் கிடைக்க வில்லை. மேற்படி ஊர்வலத்தில் கலந்து கொள்ளக் கூடாதென்று நான் எவ்வித உத்தரவும் பெறவில்லை.

வினு :—ஒத்துழையா இயக்கத்தைத் தோற்றுவித்தவர் காந்தி என்பது உங்களுக்குத் தெரியாதா?

விடை :—எனக்குத் தெரியாது.

ஸ்ரீகேசவப்பிள்ளை:—நம்மைப் போல் அவ்வளவு இராஜபக்தியுள்ளவர்களாக ஒரு கிராம முனிசிப் இருக்க வேண்டுமென்று நீங்கள் எதிர்பார்க்கிறீர்களா!

வினு :— இந்தக் கொண்டாட்டங்கள் நடைபெற்றதைக் குறித்து மேலதிகாரிகளுக்கு நீங்கள் தெரிவித்தீர்களா?

விடை :— இல்லை.

ஸ்ரீ கேசவப்பிள்ளை :— அஃதொரு குற்றமாகாது. இந்தக் கேள்விகள் விநோதமாக இருக்கின்றன. மகாத்மா காந்தியின் அபிப்பிராயங்களுக்கு நான் மாறுபட்டவனாயிருந்தபோதிலும் அவரை நான் நேசிக்கிறேன். அவருக்கு மரியாதை செலுத்துகிறேன். அவர் விடுதலையடைந்ததைக் குறித்து சந்தோஷமடைந்தவர்களுள் நானும் ஒருவன்.

கோர்ட்டார் ;— காந்தி ஒரு மஹானா இல்லையா என்பது இங்குக் கேள்வியல்ல. அவர் ஒத்துழையாதார்; அரசாங்க விரோதி.

ஸ்ரீ கேசவப்பிள்ளை :— அவர் அரசாங்கத்துக்குச் சத்துரு என்று நான் கருதவில்லை. பிரிட்டிஷ் குடியேற்ற நாட்டுக்குரிய அந்தஸ்தை இந்தியாவுக்குக் கொடுக்கவேண்டுமென்றே அவர் கேட்கிறார். ஜனங்களை வரி கட்டவேண்டாமென்று அவர் இன்னும் கூறவில்லை. மதுபானத்திற்கு அவர் விரோதமாக இருக்கிறா என்பதுண்மை.

பப்ளிக் பிராஸிகியூடர் :—அவரை ஒரு சத்துருவாக அரசாங்கத்தார் கருதியிருக்கின்றனர். கிராம மாஜிஸ்ட்ரேட்டான இவர் இதை உணர்ந்திருக்கவேண்டும்.

ஸ்ரீகேசவப்பிள்ளை :—அஃதொரு குற்றமாயிருந்தால் கோர்ட்டார் ஒன்றும் செய்வதற்கில்லை. கொண்டாட்டம் நடைபெற்றதைப் பற்றி அவர் கூறியவற்றை பதித்துக்கொள்ள வேண்டுவதே கோர்ட்டார்கடமை.

பிறகு வழக்குச்சம்பந்தமாக குறுக்கு விசாரணை நடைபெற்றது. (நியு இந்தியா)

## பம்பாயில் காந்தியடிகள்

### உண்மை நிரப்பிய உபதேசமொழிகள்

சென்ற வெள்ளிக்கிழமை முதல் மகாத்மா காந்தி பம்பாயில் பல கூட்டத்தினரால் வரவேற்கப்பட்டு உபசாரம் செய்யப்படுகிறார். சென்ற வெள்ளிக்கிழமை பம்பாய் நகரபரிபாலன சபையாரால் வரவேற்கப்பட்டு உபசரிக்கப்பட்டார்.

சனிக்கிழமை மாலை ராஷ்டிரிய ஸ்திரீ சபையின் ஆதரவில் தாதாபாய் ஜயந்தியைக் கொண்டாட ஒரு கூட்டம் கூட்டப்பட்டது. அப்பொழுது காந்தியடிகள் ஒரு சிறிய உபந்நியாசம் செய்தார். அதில் தாதாபாயின் அரிய ஊழியங்களைச் சிலாகித்துப் பேசிவிட்டு சர்க்காவைப் பற்றியும் கதரைப் பற்றியும் குறிப்பிட்டு, ஸ்திரீகள் இதனை முக்கியமாக அநுஷ்டிக்கவேண்டு மென்றும் கூறினார். பிறகு ஸ்ரீமதி டோரப் டாடாவை, ஏன் நூல் நூற்கக்கூடாதென்று மகாத்மா கேட்டார். அதற்கு அவ்வம்மையார், தம்மிடத்தில் பணமிருப்பதாகவும் அவருடைய வேலைக்குத் தாம் பண உதவி செய்வதாகவும் கூறினார். ஆனால் காந்தியடிகள் அப்பணத்தை ஏற்றுக்கொள்ள மறுத்து, அவ்வம்மை நூல் நூற்கவேண்டுமென்றும் அதனைப் பலரும் பின் பற்றுவர் என்றும் கூறினார். பிறகு, அந்நியநாட்டுத் துணிகளைக் கட்டிக்கொண்டிருப்பவர்கள் நிர்வாணமாக இருப்பதாகவே தாம் கருதுவதாகவும் ஒவ்வொருவரும் தினந்தோறும் அரை மணி நேரம் நூல் நூற்கவேண்டு மென்றும் மகாத்மா கூறினார்.

சென்ற ஞாயிற்றுக்கிழமை பம்பாய் பார்ஸி ராஜகிய சபையாரால் மகாத்மா காந்தி வரவேற்கப்பட்டு உபசரிக்கப்பட்டார். அக்கூட்டத்திற்கு ஸ்ரீமான் ஜயகர் தலைமை வகித்து மகாத்மாவின் ஊழியத்தைச் சிலாகித்துப் பேசினார். பிறகு ஸ்ரீமதி சரோஜனி தேவி, ஸ்ரீமான் யமுனாதாஸ் துவாரகதாஸ் முதலியோரும் பேசினார். ஸ்ரீமான் துவாரகதாஸ் பேசியபோது மகாத்மாவை 'காந்திஜி' என்று குறிப்பிட்டார். அங்ஙனம் குறிப்பிடக்கூடாதென்றும் மகாத்மா வென்று குறிப்பிடவேண்டு மென்றும் சிலர் ஆரவாரம் செய்தனர். இதனைக் கேட்டு காந்தியடிகள் வருத்தமுற்று, அங்ஙனம் ஒருவரையும் வற்புறுத்தக்கூடாதென்று கூற இருவர் எழுந்து மன்னிப்புக் கேட்டுக்கொண்டனர். இக்கூட்டத்தில் காந்தியடிகள் செய்த உபந்நியாசத்தின்சாரம் வருமாறு :—

### "புகழ்ச்சி மொழிகளைக்கண்டு சலித்துப் போய்விட்டேன்"

"இப்பொழுது நான் அதிகமாக ஒன்றுங் கூற விரும்பவில்லை. என்னுடைய கைராட்டினம் இங்கே இருந்தால் நான் அதைச்சுழற்றிக் கொண்டேயிருந்து, கடைசியில், நீங்களும் இதே மாதிரி சுற்றுங்கள் என்று சொல்லியிருப்பேன். என்னைப் பற்றிக் கூறப்படும் புகழ்ச்சி மொழிகளைக் கண்டு நான் சலித்துப்போய்விட்டேன். உங்களுடையஆரவாரமற்றஉதவியே இப்பொழுது எனக்குவேண்டும். ஸ்ரீமான்யமுனாதாஸ் துவாரகதாஸை அவமானப் படுத்தியவர்கள் முதலில் மன்னிப்புக் கேட்டுக் கொள்ளவேண்டுமென்ற கூறுவேன். ஒரு மனிதனை நாம் கௌரவிப்பது உண்மை யானால் அவனுடைய விருப்பு வெறுப்புகளுக்கும் நாம் சகித்துக் கொண்டு போக வேண்டும். ஆனால் இங்குள்ளவர்கள்இந்தமுறையைஅநுசரியாமல் மகாத்மாவென்ற கோஷத்துடன், நான் எதை விரும்பவில்லையோ அதைச்செய்திருக்கிறார்கள். நான் சொன்னபடி ஜனங்கள் நடப்பார்கள் என்ற நம்பிக்கை எனக்கு ஏற்பட்டிருக்குமாயின், என் விஷயத்தில் மகாத்மா வென்ற அடைமொழியை உபயோகப்படுத்த வேண்டாம் என்றே கூறியிருப்பேன். என் ஆசிரமத்தில், என்னை ஒருவரும் மகாத்மாஜி என்று அழைக்கக்கூடாதென்று விதி ஏற்பட்டிருக்கிறது.

ஸ்ரீமான் யமுனாதாஸுக்கு அவமரியாதை செய்தவர்கள் எனக்கும் அவமரியாதை செய்தவர்களாவார்கள். பலாத்காரமற்ற ஒத்துழையா தருமத்தினின்றும் அவர்கள் பிறழ்ந்தவர்களாவார்கள். நான் ஓர் ஆபத்துள்ள மனிதன் என்று ஸ்ரீமான் யமுனாதாஸுக்கு அபிப்பிராயம் இருக்குமானால் அதை அவர் பகிரங்கமாகக் கூற எவ்விதத்திலும் உரிமையுடையவரே. அவரை அவமரியாதை செய்தவர்கள் சுயராஜ்யத்திற்கு அருகரல்லர் என்பது என்னுடைய அபிப்பிராயம்."

இதைக் கேட்டதும் இரண்டு கனவான்கள் எழுந்து, தங்கள் செய்தது மன்னிப்புக்கேட்டுக்கொண்டார்கள். பிறகு மகாத்மா தொடர்ந்து பேசியதாவது :—

### "நான் ஒரு மகாத்மா வல்ல"

சமரஸ குணத்தை ஒவ்வொருவரும் அநுஷ்டிக்கவேண்டும். தங்களுடைய மதத்திற்கு மாறாக வேறொருவர் அபிப்பிராயங் கொண்டால் அதனைச் சகியாதவர், தமது மதத்தில் உண்மையான பற்றுக்கொண்டவராகமாட்டார். சமரஸ உணர்ச்சி வாராமலிருப்பதென்பது ஒருவியாதியேயாகும். இதனை ஒழிக்கவே நான் முயற்சி செய்கிறேன். ஆனால் இதில் நான் வெற்றிபெறவில்லை. ஏனென்றால் நான் ஒருமகாத்மாவல்ல. நான் ஒரு சாதாரண மனிதனே. நான் இதில் தவறிப்போனதற்குக் காரணம் என்னிடத்தில் ஏதோ குறைகள் இருக்கவேண்டும். நம்முடைய விரோதிகளையும் நமது சத்துருக்களாகக் கருதவேண்டுமென்பதே ஒத்துழையாமையின் மூலதத்துவமாகும். தளபதி டையரையும் ஸர் மைக்கல் ஓட்வியரையும் நாம் ஒரு பரிதாப எண்ணத்துடனே கவனிக்கவேண்டுமன்றி, அவர்கள் விரோதிகள்போல் நடந்துகொண்ட போதிலும் நாம் அவர்களை விரோதிகளாகக் கவனிக்கக்கூடாது. இப்பொழுது இரண்டு சகோதரர்கள் மன்னிப்புக் கேட்டுக்கொண்ட காட்சியானது, என்னுடைய வருத்தத்தைப் போக்கி எனக்குச் சந்தோஷத்தைக் கொடுத்துவிட்டது. சட்டசபைப் பிரவேசத்தைவிட இந்தக்காட்சியே சுயராஜ்யத்திலுள்ள எனது நம்பிக்கையை அதிகப்படுத்துகிறது. இங்ஙனம் கூறுவதற்காக ஸ்ரீமான் ஜயகர் என்னை மன்னிப்பாரென்று நம்புகிறேன்.

பிறகு மலையாளத்திலுள்ளவர்கள் வெள்ளத்தினால் கஷ்டப்படுவதைப்பற்றிக் குறிப்பிட்டு விட்டு, சர்க்காவினால் பொருளாதார நன்மை இருப்பதைப்பற்றியும் குறிப்பிட்டார். இந்தக் கூட்டத்தில் சுமார் ஏழாயிரம் ரூபாய் வசூல் செய்யப்பட்டு தென்னிந்திய வெள்ளக் கஷ்ட நிவாரண நிதிக்கு அளிக்கப்பட்டது.

### காங்கிரஸ் கட்டளை

பிறகு பம்பாய் மாகாண காங்கிரஸ் கமிட்டியில் மகாத்மா காந்தி ஏழு நிமிஷம் பேசினார். அப்பொழுது நூல் நூற்பதைப்பற்றி காங்கிரஸ் தீர்மானம் அமுலில் இருக்கும் வரை, அதன்படி நடந்து தீரவேண்டும்; அல்லது ராஜீநாமா செய்ய வேண்டும் என்று அவர் கூறினார்.

### பூனா விஜயம்

மகாத்மாகாந்தி ஸ்ரீமான்கள் மகாதேவ தேசாய், இராமதாஸ் காந்தி இவர்களுடன் வியாழக்கிழமையில் பூனாவுக்கு விஜயம் செய்தனர். அன்று காலை விஷ்ணு சாஸ்திரி சிப்ளங்கரின் உருவச் சிலையைத் திறந்து வைத்தார். பிறகு இந்திய ஊழியர் சங்கத்திற்குச் சென்று அங்கு சிறிதுநேரம் பேசிவிட்டுபிறகு 'கேசரி,' 'மஹாராட்டா' பத்திரிகாலயத்தில்;சுயராஜ்யக் கட்சியாருடன் சம்பாஷித்தனர். மாலையில் ஸ்திரீகள் கூட்டமொன்றில் பேசினார்.

சென்ற திங்கட்கிழமை பதினோராவது ஷாஹூதி ஜதாஜயிதோவில் கைதிசெய்யப்பட்டது.



## வெளி நாடு

லண்டன் உடன்படிக்கை எல்லாராலும் கையெழுத்திடப்பட்டது. ஜர்மனி ரீச்ஸ்டாக் சபையிலும் இவ்வுடன்படிக்கையை அங்கீகரிப்பதாகத் தீர்மானம் பெரும்பான்மையோரால் நிறைவேற்றப்பட்டது.

* * *

ஓட்வியர்-நாயர் வழக்கில் நீதிபதி மக்கார்டி கூறிய தீர்ப்புச் சம்பந்தமாக லார்ட் ஒலிவியர் இந்தியா அரசாங்கத்தாருக்கு விடுத்த அறிக்கையைப்பற்றிக் கேட்கப்பட்டபோது, சமயம் வந்துழி அதற்குத்தக்க விடையிறுப்பதாக நீதிபதி மக்கார்டி கூறினாராம்.

* * *

சுதந்தரத் தொழிற்கட்சியின் தேசிய சபையார் கிளாட்டன் என்ற இடத்தில் கூட்டங் கூடி, இந்தியாவிலுள்ள பல கட்சிப் பிரதிநிதிகளும் அடங்கிய மகாநாடு கூட்டப்படவேண்டுமென்றும், அவர்களைக்கொண்டு இந்திய சுயஆட்சி மசோதா தயாரிக்கப்பட வேண்டுமென்றும், அதனைப்பற்றி பிரிட்டிஷ் அரசாங்கத்தாரோடு வாதிக்கவேண்டு மென்றும் ஒரு தீர்மானம் நிறைவேற்றி யிருக்கின்றனர்.

* * *

இங்கிலாந்தில் ஹல் என்ற இடத்தில் தொழிலாளர் மகாநாடொன்று கூடியது. ஸ்ரீமான் பர்செல் என்ற பார்லிமெண்டு அங்கத்தினர் தலைமை வகித்தார். அப்பொழுது அவர் இந்தியாவில் தொழிலாளர் வேலை நிறுத்தங்களைப்பற்றிக் கூறியதாவது :— இந்தியாவிலுள்ள தொழிலாளர்கள் தங்களுடைய குறைகளைத் தீர்த்துக்கொள்ள வேலை நிறுத்தம் முதலியன செய்தார்களானால், அவைகளை அடக்க துப்பாக்கிப் பிரயோகங்களும் அடக்குமுறைகளும் உபயோகிக்கப்படுகின்றன. இந்த முறைகளை நாம் விட்டுவிடவேண்டும். இங்கிலாந்தில் தொழிலாளர் சங்கங்களுக்கு என்னென்ன உரிமைகள் இருக்கின்றனவோ அவைகள் இந்தியாவிலுள்ள தொழிலாளர் சங்கங்களுக்கும் அளிக்கப்படவேண்டுமென்று கூறினர்.

## தென்னிந்தியா வெள்ளக் கஷ்ட நிவாரணம்

பர்மாவில் பென்லிக்கோன் நகரத்தில் அடியில் கண்ட தமிழர்கள் சில பர்மாக்காரர்கள் ஸ்ரீமான். சேலம் சக்கரவர்த்தி இராஜகோபாலாசாரியாருக்கு அனுப்பிய நன்கொடைகள்:—

ஸ்ரீமான்கள்

சா. பி. ச. சண்முக சுந்தரம் பிள்ளை (யர இயந்திர சாலை) வரவு ரூ. 21 0 0
பவி. சித. முருகப்ப செட்டியார் வரவு ரூ. 15 0 0
பெ. க. சு. கருப்பன் செட்டியார் வரவு ரூ. 10 0 0
சரு. வெ. நா. செல்லப்ப செட்டியார் வரவு ரூ. 10 0 0
கரு. வெ. ராம. சாமிநாதன் செட்டியார் வரவு ரூ. 10 0 0
ராம. ஆ. நா. பொன்னுசாமி பிள்ளை வரவு ரூ. 7 0 0
சரு. வெ. அழ லெட்சுமணன் செட்டியார் வரவு ரூ. 7 0 0
குப. சு. நா. வரவு ரூ. 5 0 0
ராம. அ. அழகப்பதேவர் வரவு ரூ. 5 0 0
அ. ராம. நா. வள்ளியப்ப செட்டியார் வரவு ரூ. 5 0 0
அரு. மு. முருகப்ப செட்டியார் வரவு ரூ. 5 0 0
அ. மெ. அ. அடைக்கப்ப செட்டியார் வரவு ரூ. 5 0 0
செ. சி. வ. சோமசுந்தரன் செட்டியார் வரவு ரூ. 5 0 0
ராம. அ. கா. இராமன் செட்டியார் வரவு ரூ. 5 0 0
வெ. மீனாட்சிசுந்தரம் பிள்ளை வரவு ரூ. 5 0 0
மு. இராமலிங்க முதலியார் (போஸ்டு மாஸ்டர்) வரவு ரூ. 2 0 0
அ. மீ. பக்கிரியப்பாராவுத்தர் வரவு ரூ. 3 0 0
கா. முகம்மது ஷரீப் வரவு ரூ. 3 0 0
ச. பீ. முகம்மதுஷரீப் வரவு ரூ. 1 0 0
மானுசின் வரவு ரூ. 5 0 0
அப்துல் ஹக்கீம் வரவு ரூ. 1 0 0
பசல் கரீம் வரவு ரூ. 2 0 0
ஸ்டேஷன் மாஸ்டர் வரவு ரூ. 5 0 0
வெ. கி. தி. துரைசாமி பிள்ளை வரவு ரூ. 3 0 0
சா. பி. ச. சண்முகசுந்தரம் பிள்ளை மர இயந்திரசாலைத்தொழிலாளர்கள் வரவு ரூ. 20 0 0
மகாபீர் வரவு ரூ. 5 0 0
பாத்திர்கான் வரவு ரூ. 1 0 0
புத்து வரவு ரூ. 1 0 0
ரெகுபர் வரவு ரூ. 1 0 0
பீனு வரவு ரூ. 1 0 0
அப்துல்லா வரவு ரூ. 1 0 0
ராம்பகி சாத்து வரவு ரூ. 2 0 0
உம்மர் வரவு ரூ. 1 0 0
ஆ சந்தணஞ்சேர்வை வரவு ரூ. 2 0 0
உம்மர் குட்டி வரவு ரூ. 2 0 0
ராம்பாலியான் (அரிசி இயந்திரசாலை) வரவு ரூ. 10 0 0
கோய்வா. கொக்கா வரவு ரூ. 10 0 0
மவ்ஞ்ஞோ வரவு (ரேஞ்சர்பாரஸ்டு) ரூ. 5 0 0
மவ்லா வரவு (விவசாயம்) ரூ. 5 0 0
மவ்ங்பாத்தான் வரவு ரூ. 5 0 0
மவ்ப்போலம் வரவு ரூ. 5 0 0
மவ்ப்போபி வரவு ரூ. 5 0 0
மவ்ம்பா வரவு ரூ. 5 0 0
கோட்டுங் ஒவ்ங் வரவு ரூ. 5 0 0
கொசீ யெவ்ங் வரவு ரூ. 2 0 0
ஊ ஆரீ வரவு ரூ. 2 0 0
கொட்டுங் உவே வரவு ரூ. 1 0 0
கொக்கான் சுலி வரவு ரூ. 1 0 0
மவ்ம்பு வரவு ரூ. 1 0 0
மாயே வரவு ரூ. 5 0 0
மவ்ம்யோ வரவு ரூ. 1 0 0
கொசி. ஆங் வரவு ரூ. 6 0 0
கொச் சோசாங் வரவு ரூ. 5 0 0
மாம்மோயி வரவு ரூ. 5 0 0
கொப்போமியாங் வரவு ரூ. 5 0 0
மவ்சாம்பே வரவு ரூ. 2 0 0
மவ்ப்பான் சி வரவு ரூ. 1 0 0
மவ்ப்போமி (கன்னிக்குயின்) ரூ. 10 0 0
மவ்ஞ்ஞா வரவு ரூ. 1 0 0

ஆகமொத்தம் ரூ. 285 0 0



## தமிழ்நாடு காங்கிரஸ் கத்தர்போர்டு, திருப்பூ[ர்]

1924-௵ ஜூன்-௴ 31-உ யோடு முடிவாகும் 3 மாதகாலத்திய அறிக்கை

[மு]ந்திய அரை வருஷத்தில் துவக்கம் செ[ய்ய]ப்பட்ட வேலையைத்தான் கத்தர்போர்டு ...[ஏப்ரல்], மே, ஜூன் மாதங்களில் நடத்திவந்த... வேலையில் புதிதாக திட்டம் ஒன்றும் இல்... [இல்லா]விட்டாலும், செய்யப்பட்ட வேலையானது [அ]திகமாகவும், திருப்திகரமாகவும் இருக்கிற[து எ]ன்றே சொல்லவேண்டும். இந்த மூன்று [மா]தத்தில் செய்யப்பட்ட வேலைக்கு அகி[ல இ]ந்தியா கத்தர்போர்டாரே காரணமாவார்கள். [அ]வர்கள் நம் போர்டுக்கு ஒரு லக்ஷம் ரூபா[ய் க]டன்கொடுத்து உதவியதற்கு அவர்களுக்கு [நன்]றி பாராட்ட கடமைப்பட்டிருக்கிறோம். ...காண கத்தர்போர்டார், கடன் நிபந்தனை[களை] கூடியவரையில் அனுசரிக்கவேண்டு[மென்]றும், அகில இந்தியா கத்தர்போர்டா[ர் க]டனை திருப்பிக் கேட்கும்பொழுது ...[தொ]கையை சுலபமாகக் கொடுத்துவிட வேண்[டு]மென்றும் நோக்கம் கொண்டிருப்பதனால் ... தொகையை ஜாக்கிரதையாக உபயோ[கி]த்து வருகிறார்கள்.

### கத்தர் உற்பத்தி

[கி]ளை டெப்போக்கள் வைத்ததின் ...[அதி]க கத்தர் விற்பனை அதிகரித்தது. ஏப்[ர]ல்-௴ ஆரம்பத்தில் விற்பனைக்குப் போது[மா]ன அளவு கத்தர் உற்பத்தி இல்லை. ஆகை[யா]ல் உற்பத்தியை அதிகம்செய்ய கவனத்[தை]ச் செலுத்தவேண்டியிருந்தது. தஞ்சா[வூ]ரிலும், அதிராம் பட்டணத்திலும் ஒவ்[வொ]ன்றிலும் ரூ. 3,000 மூலதனத்துடன் [உ]ற்பத்தி சாலைகள் ஏற்படுத்தப்பட்டன. [தி]ருப்பூர் காதி வஸ்திராலயமும் உற்பத்தியை [அ]திகம் செய்தது. தற்போது ரூ. 15,000 [மு]தல் ரூ. 20,000 வரை உற்பத்தி செய்யப்[பட்]டு வருகிறது. வாரம் ஒன்றுக்கு [ரூ.] 2,000 கத்தர் கொடுப்பதாக போர்டா[ரு]டன் ஊத்துக்குளி ஸ்ரீமான் குப்புசாமி [அ]ய்யர் ஒப்பந்தம் செய்துகொண்டிருக்கிறார். [ம]ற்றும் இரண்டு கனவான்கள் இம்மாதிரி [ஒ]ப்பந்தம் செய்துகொள்ளத் தயாராயிருக்[கி]றார்கள். மொத்தமாக காதி வஸ்திராலயத்[தி]ல் மாதம் சுமார் ஐம்பதினாயிரம் ரூபாய் [பெ]றுமான கத்தர் சேர்த்துவைக்க வேண்டு[மெ]ன்பது போர்டின் நோக்கம். தனிப்பட்ட வியாபாரிகளின் துணிகளும் நன்றாக விற்கப்[ப]ட்டு வருகிறது. கத்தர்போர்டு, திருப்பூர் [க]த்தர் வியாபாரிகளுக்கு உதவிபுரிய முயற்சி [செ]ய்துவந்தது. சுமார் ரூ. 15,000த்திற்கு அவர்களிடமிருந்து ஜவுளி போர்டார் வாங்கி[யி]ருக்கிறார்கள். கத்தர் அதிகமாக உற்பத்தி செய்வதற்காக திண்டுக்கல் ஸ்ரீமான் அமிர்த[லி]ங்கம் அய்யர் அவர்களுக்கு கடனாக ரூ. 1,000 கொடுக்கப்பட்டிருக்கிறது. கடன் [நி]பந்தனைப்படி அவர் ... தொகையை [த]வணைகளில் செலுத்தி வருகிறார். போர்[டி]ன் கிளை வஸ்திராலயங்கள் ஆங்காங்கு கத்தர் உற்பத்தி செய்பவர்களுக்கு உதவி புரிந்துவருகின்றன. முக்கியமாக ஏப்ரல் மாதத்தில் [ஏ]ற்படுத்தப்பட்ட சேலம் காதி வஸ்திராலயத்[தி]ல், சேலம் ஜில்லாவிலும், பக்கத்திலும் உற்பத்தியாகும் கத்தர்தான் விசேஷமாக [ஸ்]டாக் செய்யப்பட்டு விற்கப்பட்டு வருகிறது. இம்மாதிரியே மதுரை காதி வஸ்திராலயம் திண்டுக்கல், திருநெல்வேலி கத்தருக்கு உதவி புரிந்துவருகிறது.

கத்தர் அபிமானிகள் சேலை உற்பத்திக்கு விசேஷ கவனம் செலுத்தவேண்டுமென்று அடிக்கடி வற்புறுத்தி யிருக்கிறார்கள். தமிழ் நாட்டு ஸ்திரீகளுக்கு உபயோகப் படக்கூடிய புடவைகள் உற்பத்தி செய்ய கொஞ்சம் ஏற்பாடுகளும் செய்யப்பட்டிருக்கின்றன. [சே]தனூர், வடசேரியில் உற்பத்தியாகும் மெல்லிய நூல் எல்லாவற்றையும், புடவைக்கென்றே ஒதுக்கிவைத்து சேலைகள் செய்யப்பட்டு வருகின்றன. மாதம் குறைந்தது ... மெல்லிய நூலில் செய்யப்பட்ட புடவைகள் ... வது உற்பத்தியாகுமென்று நம்புகிறோம். சாதாரணமாக 10,12 நெ. நூலில் தயார் செய்த புடவைகள் தேவைக்குத் தக்கவாறு உற்பத்தி செய்யப்பட்டு வருகின்றன.

### பஞ்சுஸ்டாக்

அகில இந்தியா கத்தர் போர்டின் கடனில் முதல் பலனாக கத்தர் அபிவிருத்திக்கு வேண்டிய பஞ்சு சேகரித்துவைக்க வசதி ஏற்பட்டது. பஞ்சு ஸ்டாக் செய்வதற்காக மாகாண கத்தர் போர்டாரால் சாங்ஷன் செய்யப்பட்ட ரூ. 40,000த்தில் ரூ. 32,000மாத்திரம் எடுக்கப்பட்டிருக்கிறது. ரூ. 50,000 பெறுமான பஞ்சு வாங்கப்பட்டு அதில் பாதி இம்மூன்று மாதகாலத்தில் கத்தர் உற்பத்திக்கு செல

...வதாக ...
கள். ...
இனிகாத...
தங்கள் ...
வேண்டிய...
கமென்று...

கத்...

முந்திய மாத...
தீவிரமாக நடந்...
மிகவும் குறைந்திருக்...
செய்யப்பட்ட ரூ. 1...
வழிக்கப்பட்டு விட்...
1,000 கொடுக்கப்பட்ட...

ரூ. 5,000த்...
வருஷம் செய்யப்...

கணக்...

கத்தர் போர்டின...
திராலயங்களின் க...
31-தேதியோடு ஸ்ரீ...
வாமி அய்யங்கார்...
பரிசிலனை செய்யப்...
பிரகாரம் செய்யப்பட்...
தூர், திருப்பூர் மதுரை...
குகளில் லாபம் காண...
ஈரோடு, மதராஸ். ...
களில் கொஞ்சம் நஷ்...
ஆனால் வஸ்திராலயம்...
காலத்திற்குள் ஈரோ...
லயங்களின் கணக்கு...
பட்டதால் இவைகளின்...
என்று சொல்லமுடியா...
கணக்குகளில் காண...
திற்கு காரணமாகும்.
வதற்கு முன்னமே...
ரூ. 100 நஷ்டம் ...
பொழுது நஷ்டமில்லை...
செப்டம்பர்-௴ 30-தே...
கள் பரிசீலனை செய்ய...

### வைக்கம் ச...

வைக்கம் சத்யாக்கி...
கத்தர் துணிகள் நன்...
கப்பட்டன.

Library's copy lacks half a page

